

# ஸ்ரீ சிவோத்கர்ஷ மஞ்சரீ

மஹாகவி ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர்

# SRI SIVOTHKARSHA MANJARI

By

**SRI NILAKANTA DIKSHITA**

TEXT IN SANSKRIT WITH TAMIL

TRANSLATION AND COMMENTARY

By

P.S. KRISHNAN, B.Sc.

மஹாகவி ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர்

இயற்றிய

# ஸ்ரீ சிவோத்கர்ஷ மஞ்சரீ

பி.எஸ். கிருஷ்ணன் B.Sc.

எழுதிய தமிழ் மொழிபெயர்ப்பு

விளக்கவுரையுடன்

# முன்னுரை

विराजमानं शृङ्गाद्रौ ज्वलन्तं ब्रह्मतेजसा ।
अलंकृतं तपोलक्ष्म्या भारतीतीर्थमाश्रये ॥
अवतारः पराशक्त्या इत्याहुर्यं मनीषिणः ।
नीलकण्ठमखीन्द्रं तं कविवर्यं नमाम्यहं ॥

ஸ்ரீ சிவோத்கர்ஷ மஞ்சரீ என்னும் நூல் மஹாகவி ஸ்ரீநீலகண்ட தீக்ஷிதர் அவர்களின் லகுகாவ்யங்களில் ஒன்றாகும். இதன் பெயரிலிருந்தே இது லோகபிதா வாகிய பரமசிவனின் தம் நிகரில்லா உயர்வை பிரகடனம் செய்யும் நூல் என்பது தெளிவு. புஷ்ப தந்தரின் சிவ மஹிம்ன ஸ்தோத்திரமும், ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் அவர்களின் பிரம்ம தர்க்க ஸ்தவமும் இந்த நூலுக்கு முன்னோடிகள் போன்றவை. சார்த்தூல விக்ரீடதம் என்னும் விருத்தத்தில் 52 செய்யுட்களால் ஆக்கப்பட்ட இந்நூலின் ஒவ்வொரு செய்யுளும் ''ஸ்வாமீ மமதைவதம் தத்தரோ நாம்னாபி நாம்னா யதே'' என்னும் மகுடத்துடன் முடிகின்றது இதன் பொருள் — ''அவரே (பரமேச்வரனே) முழு முதற் கடவுள் - என் தெய்வமும் அவரே. அவரைத் தவிர்த்து பிற தெய்வம் எதுவும் பெயரளவில் கூடக் கூறப் படுகிறதில்லை.'' தம்முடைய வாதத்திற்கு ச்ருதி, ஸ்மிருதி, சைவ ஆகமங்கள், மஹாபாரதம் மற்றும் புரா ணங்கள் முதலியவைகளிலிருந்து ஏராளமான மேற் கோள்களை எடுத்து விளக்கி சிவபாரம்யத்தை வெகு தெளிவாகவும் பாங்காகவும் நிர்த்தாரணம் செய்கிறார். அனன்ய ஸாத்யமான செயல்களுக்கு - காம ஜயம், கங்காதரணம், கால ஸம்ஹாரம், ஹாலாஹல பானம் போன்றவையும், அபார கருணைக்கு - உபமன்யு சரித்திரமும் தனக்கொன்றும் வேண்டாது பிறருக்கே எல்லாவற்றையும் வழங்கும் உதார குணத்திற்கு - தேவர்களை திக்பாலகர்களாகச் செய்து தான் திகம்பர ராகத் திகழ்வதையும் - மற்றும் இதுபோன்ற தனிப்

பெரும் பெருமைகளை விளக்கி பரமேச்வரன் அகணித குணசீலனாக விளங்குகிறார் என்பதை நன்கு புகட்டுகிறார்.

இந்த நூலுக்கு ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் வம்ச்யரான சிவானந்த யோகி என்னும் பெரியவர் ஸம்ஸ்க்ருதத்தில் ஒரு வ்யாக்யானம் செய்திருக்கிறார். அதற்கு यद्दार्थ-बोधटीका என்று பெயர். இந்த மஹான் பூர்வாச்ரமத்தில் திருநெல்வேலி ஜில்லா கடையம் சேஷு தீக்ஷிதர் என்று அழைக்கப்பட்டார். பிறகு ஸன்யாஸம் பூண்டு தென் கைலாசம் என்னும் காளஹஸ்தியில் வாழ்ந்து வந்தார். அவருடைய வியாக்யானத்தை அனுசரித்தே என்னுடைய மொழிபெயர்ப்பும், விளக்கமும் செய்யப் பட்டிருக்கின்றன.

இந்த நூலை அச்சிட்டு வெளியிடுவதற்கு என்னை உற்சாகப்படுத்தி, கணிசமான பொருளுதவியும் செய்த என்போல் ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் வம்ச்யரான ஸ்ரீ எம். நீலகண்டன் (Hong Kong) அவர்களுக்கு என்னுடைய ஆசீர்வாதங்களையும் க்ருதக்ஞதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்

இந்நூலின் கையெழுத்துப் பிரதியை பரிசீலனை செய்து பல பிழைகளைத் திருத்தி உதவிய ஸம்ஸ்க்ருத வித்வான் ஸ்ரீ சந்திரமௌளீச்வர சாஸ்திரிகளுக்கும், அதேபோல் அச்சாகும் பொழுது பிரதியைப் பார்த்துப் பிழைகளைத் திருத்தி உதவிய ஸ்ரீ S. N. சாஸ்திரி (IRS. Rtd.) அவர்களுக்கும் என் நன்றியைத்தெரிவித்துக் கொள்கிறேன். இந்த நூலை அழகான முறையில் அச்சிட்டுத் தந்த ஸ்ரீ சுரபி அச்சகத்திற்கும் என் நன்றி உரித்தாகும்.

பாலாமடை கிராமம்
திருநெல்வேலி ஜில்லா
1—8—1994

பி. எஸ். கிருஷ்ணன்

ॐ

श्री गुरुभ्यो नमः।

महाकवि श्री नीलकण्ठदीक्षित विरचिता

॥ श्री शिवोत्कर्षमञ्जरी ॥

या लक्ष्मीस्त्रिजगच्छरण्यचरणा तस्याः पतिर्यच्छरो
यद्देयं निखिलैर्वदान्यनिवहैस्तद्यस्य जीर्णं धनुः।
या संविच्छ्रुतिषु श्रुता रहसि सा यत्पादसंसेविनी
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

*பதவுரை*

| | |
|---|---|
| या लक्ष्मीः | *எந்த லக்ஷ்மியானவள்* |
| त्रिजगच्छरण्यचरणा | *மூவுலக மக்களும் அடைக்கலம் புகும் பாதங்களை உடையவளோ* |
| तस्याः पतिः | *அந்த லக்ஷ்மியின் நாயகனான விஷ்ணு* |
| यच्छरः | *எவருடைய அம்பாக (ஆனாரோ)* |
| निखिलैः वदान्यनिवहैः | *கொடையில் சிறந்த வள்ளல்கள் அனைவராலும்* |
| यत् देयम् | *எந்த ஸுவர்ணமானது (தானமாக) கொடுக்க உகந்ததோ* |

| | |
|---|---|
| तत् यस्य जीर्णं धनुः | அந்த ஸுவர்ணம் (மேருபர்வதம்) எவருடைய தேய்ந்துபோன வில்லாயிற்றோ |
| श्रुतिषु या श्रुता | வேதங்களில் எவள் கூறப்படுகின்றாளோ |
| सा संवित् | அந்த ஞான ரூபிணியாகிய பராசக்தியும் |
| रहसि यत्पादसंसेविनी | ரஹஸ்யமாக எவருடைய பாதங்களை இடைவிடாது பணிகின்றாளோ |
| सः स्वामी | அவரே தலைவராக விளங்கக் கூடிய முழுமுதற் கடவுள் |
| मम दैवतं | என்னுடைய தெய்வமும் அவரே. |
| तदितरं. | அவரைத் தவிர்த்த பிறதெய்வமெதுவும் |
| नाम्नापि न अम्नायते | பெயரளவில்கூடக் கூறப்படுவதில்லை. |

* பின்னால் வரும் எல்லா சுலோகங்களின் கடைசி பாதத்திற்கு இதேபோல் அர்த்தம் செய்து கொள்ளவும்.

விளக்க உரை:—

ஸர்வேச்வரனான மஹாவிஷ்ணுவும் சிவாராதனம் செய்ததாலேயே வைகுண்டம், மஹாலக்ஷ்மி முதலான ஸம்பத்துக்களை அடைந்தார் என்பது வேதலோகப் பிரசித்தம்.

"तव श्रिये मरुतो मर्जयन्त रुद्र यत्ते जनिम चारु चित्रम्। पदं यद्विष्णोः उपमं निधायि तेन पासि गुह्यं नाम गोनाम"

என்பது ருக்வேதம் (ஸம் V–3–3) உபதேச காண்டத்திலும், "சங்கரரின் ப்ரிய கிங்கரராகிய விஷ்ணு லிங்க மூர்த்தியாகிய ஸதாசிவனைக் குறித்துக் கடும் தவம் புரிந்து பார்வதீசனின் அருளால் உத்தமமான வைஷ்ணவ பதத்தையும் 'மஹாலக்ஷ்மீபதி' எனும் பாக்கியத்தையும் அடைந்தார்" என்று கூறப்படுகிறது.

மஹாலக்ஷ்மியை அடைவதற்கு மஹாவிஷ்ணு கடுந்தவம் புரிந்தார் என்றால், அம்மஹாலக்ஷ்மியின் லோக சரண்ய விஷயத்தில் வேறு பிரமாணம் நமக்குத் தேவையில்லை. மஹாலக்ஷ்மியின் அருளை நாடாதார் மூவுகிலும் இல்லை.

அவளுடைய பதியான மஹாவிஷ்ணு ஒருசமயத்தில் (த்ரிபுர ஸம்ஹார ஸமயத்தில்) மஹேச்வரனுக்கு அம்பாகித் தொண்டு புரிந்தார் என்றால், அம் மஹேச்வரரின் பெருமையை யார்தான் அளவிட்டுக்கூற முடியும்!

ஸுவர்ண மலையான மஹாமேரு அம்மஹேச்வரனுக்கு வில்லாகித் தொண்டு செய்தது.

வித்யா ஞான ரூபிணியாகிய பராசக்தி உமையம்மையும் தகராகாசத்தில் துரீய பாதரூபத்துடன் பிரகாசித்துக் கொண்டு, மஹேசனின் பாதார விந்தங்களை இடைவிடாது பணிந்து, அவரது திவ்யமங்கள ஸ்வரூபத்தையே ஸேவித்துக் கொண்டிருக் கிறாள்.

இத்தகைய மஹிமைகள் நிறைந்த ஸர்வேச்வரன் பசுக்களாகிய ஜீவன்களுக்குப் பதியாக விளங்குகின்றார். அவரையே நான்கு வேதங்களும் முக்கிய தெய்வமாகக் கொண்டாடுகின்றன. பிற தெய்வங்களைப்பற்றி,

ओं नमो ब्रह्मणे

என்பன போன்ற கர்ம ப்ரஸித்தமான மந்திரங்கள் கொண்டாடுவது போல் தோன்றினாலும்,

यस्मै नमः तच्छिरः

என்றபடி, எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாய் தலைவனாய் உள்ள பரமேச்வரனையே அவை சென்றடையும்.

(2) அவதாரிகை:—

உள்ளத்தில் தூய்மை உண்டாயின் ஈசனின் அருள் நமக்குக் கிட்டும் என்ற உண்மையை கீழ்வரும் சுலோகத்தால் விளக்குகிறார்:-

अर्चामीति धिया यदेवः कुसुमं क्षिप्त्वा जनो मुच्यते
विध्यामीति धिया तदेव विकिरन्भस्मीकृतो मन्मथः।
इत्याभ्यन्तरवृत्तिमात्ररसिको बाह्यानपेक्षश्च यः
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| अर्चामि इति धिया | அர்ச்சனை செய்கிறேன் என்ற எண்ணத்துடன் |
| यद्देव कुसुमं क्षिप्त्वा | ஏதோ ஒரு மலரை ஈசனின்மீது போட்டு |
| जनः मुच्यते | ஒரு மனிதன் வீடுபேற்றை (மோக்ஷத்தை) அடைகிறானே |
| विध्यामि इति धिया | நான் (மஹேசனின் தபஸ்ஸை) கலைக்கிறேன் என்ற எண்ணத்துடன் (தவத்தில் ஈடுபட்டுள்ள ஈசனின் உள்ளத்தை எனதுமலரம்பால் அடித்துக் கலக்கி மாற்றுகிறேன்) என்னும் அஹந்தையுடன் |

| | |
|---|---|
| तदेव विकिरन् | அதே மலரை ஈசனின்மேல் போட்ட |
| मन्मथ: | மன்மதன் |
| भस्मीकृत: | (தூய்மையற்ற மனத்தினனாய் அகந்தையுடன் செயல்பட்டதால்) சாம்பலாக்கப்பட்டான். |
| इति य: | என்று இவ்வாறு எவர் |
| आभ्यन्तरवृत्तिमात्ररसिक: | உள்ளத்தில் உண்டாகின்ற உணர்ச்சியை மாத்திரம் கொண்டு மகிழ்கிறாரோ, |
| बाह्यानपेक्ष: च | வெளி ஆடம்பரங்களை விரும்பாதவராக விளங்குகிறாரோ |
| स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते | முன்போல் அர்த்தம் செய்து கொள்ளவும் |

*விளக்கவுரை*

உண்மையான பக்தியையே பகவான் பஹுமானிக்கிறார். கண்ணும் கருத்தும் அவரிடத்தில் நில்லாது, வாயால் துதிசெய்து கையால் அர்ச்சனை செய்தால், அவர், அதை ஏற்றுக் கொள்ளமாட்டார்.

உள்ளம் நிறைந்த பக்தியுடன் பக்தன் செய்கின்ற சிறு கைங்கர்யத்தையும் பெரிதாக மதித்து அவனுக்கு உயர்ந்த பலனைக் கொடுக்கிறார்.

இதே கருத்தை, ஸ்ரீ அப்பய்ய தீக்ஷிதர் என்ற மஹான்,

"अर्क द्रोण प्रभृति कुसुमैः अर्चनंते विधेयं, प्राप्यं तेन
स्मरहर फलं मोक्ष साम्राज्य लक्ष्मीः"

என்று தமது ஆத்மார்பண ஸ்துதி சுலோகத்திலும்,

पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्त्या प्रयच्छति।
तदहं भक्त्युपहृतं अश्नामि प्रयतात्मनः॥

என்று ஸ்ரீ க்ருஷ்ணபகவான் கீதையிலும் கூறுவதை நாம் கவனிக்க வேண்டும்.

"நான் ஒன்றும் அறியாதவன். என்னால் ஆவது ஒன்றுமில்லை. எல்லாம் வல்ல இறைவனே எனக்குத் தஞ்சம்," என்று உளங்கனிந்து ஒரு மலரை எடுத்து அர்பணித்தாலும் போதும், அவனுக்கு மோக்ஷ ஸாம்ராஜ்யத்தையே கொடுத்தாலும் பக்தனுக்குத் தான் ஈடுசெய்ததாக ஈசன் கருதவில்லையாம்.

"देवानामपि दुर्लभं पदमिदं लब्धं मयोपायतः
द्वित्रैर्बिल्वदलैः प्रतार्य शिवमित्येवं जनो मन्यते।
मद्भक्ताङ्घ्रिरजस्स्पृशोऽपि सुलभं क्षुद्रं पदं वेधसो
दत्वा सेवक एव वञ्चित इति स्वामिन् भवान्मन्यते॥"

என்று நீலகண்ட விஜய சம்பூகாவ்யத்தில் ஸ்ரீநீலகண்ட தீக்ஷிதர் அவர்கள் மிக அழகாகக் கூறுகிறார்கள்.

ஆனால், உள்ளத்தில் கபடமும், அஹந்தையும் கொண்டு, "என் சக்தியைப் பாருங்கள். கடுந்தவத்தில் இருக்கும் பினாக பாணியாகிய சிவனுடைய சித்தத்திலும் நெகிழ்வை உண்டு பண்ணுகிறேன்" என்று அவர்மீது மலரம்பினை எய்த மதனனின் கதி என்னவாயிற்று! அடுத்த கணமே எரிந்து பிடிசாம்பலாக்கப்பட்டான்.

மன்மதனும் அவர் மேல் போட்டது மலரே. அடைந்ததோ விபரீதமான பலன். காரணம் – உள்ளத்திலுண்டான பாவனைதான்.

ஆதலால், உண்மையான பக்தி உள்ளத்தில் இருக்கவேண்டும். வெளி ஆடம்பரங்களால் இறைவனது அருளைப் பெறமுடியாது. உள்ளத்தில் கள்ளமிருப்பின் விபரீத பலனே கிட்டும்.

(3) அவதாரிகை:—

மேலும் மஹேசனுடைய உயர்வை விளக்க விரும்பும் ஸ்ரீதீக்ஷிதர் அவர்கள், 'பகவானுடன் சம்பந்தப்பட்ட எத்தகைய பொருட்களும் (இழிந்த பொருட்களும்) மிக உயர்ந்த நிலையை அடைந்துள்ளன' என்பதை இங்கு விளக்குகிறார்கள்:–

यत्केशाग्रविलग्नमम्बु जगतां तीर्थं परं पावनं
यद्वीर्यं भुवि दक्षिणेति विहितं यज्ञेषु सर्वेष्वपि।
श्वानो यस्य तपस्विनां च महतां कामप्रदा धेनवः
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| यत्केशाग्रविलग्नं अम्बु | எவருடைய கேசத்திலிருந்து வழிந்த தண்ணீரானது |
| जगतां परं पावनं तीर्थं | உலகங்களின் மிகப் புனிதமான புனல் ஆயிற்றோ |
| यद्वीर्यं | எவருடைய வீர்யமானது |
| भुवि | உலகில் |
| सर्वेषु यज्ञेषु अपि | வேள்விகள் அனைத்திலும் |
| दक्षिणा इति | தக்ஷிணையாகக் கொடுக்கத் தக்கது என்று |

| | |
|---|---|
| विहितं | (வேதங்களில்) விதிக்கப் பட்டிருக்கின்றதோ |
| यस्य श्वान: | எவருடைய நாய்கள் (நாய்கள் வடிவில் உள்ள நான்மறைகள்) |
| महतां तपस्विनां | சிறந்த முனிவர்களின் |
| कामप्रदा धेनव: | விருப்பங்களை அளிக்கும் காமதேனுவாக இருக்கின்றனவோ |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

முன்போல் அர்த்தம் செய்து கொள்ளவும்.

**விளக்க உரை**

"केशकीटनखस्पृष्टं अक्षिलालादिदूषितम्"

என்று கூறியிருப்பதால் பொதுவாக ஒருவருடைய கேசத்தில் பட்டு வெளிவரும் தண்ணீர் அசுத்தம் என்றே கருதப்பட வேண்டும். ஆனால் மஹேசனின் கேசமாகிய கபர்தத்திலிருந்து வெளிப்பட்ட தண்ணீரோ உலகிலேயே மிகப்புனிதமான கங்காநதி என்று கொண்டாடப் படுகின்றது.

பகவானுடைய வீர்யத்தினால் ஹேமகிரி சுவர்ணம் ஆக்கப்பட்டதும், அந்தச் சுவர்ணத்தையே வேள்விகளில் தக்ஷிணையாகக் கொடுக்க வேண்டும் என்பதும் மஹாபாரதம் ஆனுசாஸனிக பர்வத்தில் விளக்கப் பட்டுள்ளது.

வேடன் வேஷத்தில் மஹேசன் தோன்றிய அவஸரத்தில் வேதங்கள் நான்கும் நாய்களாக மாறி, அவருடன் வந்தன என்பது பிரஸித்தம். ஆகவே, இழிவான நாய்களும் பகவானுடையன என்னும் மஹிமையால், தவம் புரியும் முனிவர்களுக்கும் விரும்பிய

பலனை அளிக்கவல்ல காமதேனுவாக ஆகின்றன என்று இங்கு கூறப்படுகின்றது. வேத விஹிதமான கர்மாக்கள் மூலம் ஐஹிக ஆமுஷ்மிக பலன்களைப் பெரியோர்கள் பெறுகின்றனர்.

வேதங்கள் நாய்களாக மாறிய விஷயத்தை சிவலீலார்ணவத்திலும் –

''वेदाहमेतं पुरुषं महान्तं इत्यामनन्तो निगमास्सगर्वं।
श्वानः कृता येन स एव देवो वर्ण्यः कथं वाङ्मनसातिवर्ती॥''

என்று சிவோத்கர்ஷமாகவே வர்ணிக்கிறார்கள்.

உலக வழக்கில் அசுபம் அல்லது அசுத்தம் என்று கருதப்படும் கேசத்துடன் சம்பந்தப்பட்ட தண்ணீரும், புருஷ வீர்யமும், நாய்களும் மஹேசனுடைய ஸம்பந்தத்தால், முறையே, மிகப்புனிதமான கங்கா நதியாகவும், விலை உயர்ந்த சுவர்ணமாகவும், காமதேனுவைப் போல் விரும்பிய பலனை அளிக்கும் வேதங்களாகவும் ஆயின.

(4) அவதாரிகை:—

சராசரங்கள் அனைத்தையும் தனக்கு அடிமை யாக்கும் ஆற்றல் படைத்த காமனின் விருத்தாந்தத்தைக் கூறி பரமேச்வரனின் மஹிமையை மேலும் விளக்குகிறார்:-

वक्त्राब्जेषु पितामहस्य जगतां वक्षःस्थले श्रीपतेः
सर्वाङ्गेषु शतक्रतोरपि दृढानुच्छ्रित्य जैत्रध्वजान्।
संप्राप्तो मदनोऽपि यस्य निटिलज्योतिः पतङ्गायितः
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| जगतां पितामहस्य | உலகங்களுக்கெல்லாம் பிதாமஹராக விளங்கும் பிரம்ம தேவனுடைய |
| वक्त्राब्जेषु | திருவாய்களிலும் |
| श्रीपते: | லக்ஷ்மீபதியாகிய மஹாவிஷ்ணுவின் |
| वक्ष:स्थले | மார்பிலும் |
| शतक्रतो: सर्वाङ्गेषु अपि | இந்திரனின் உடல்முழுவதிலும் |
| जैत्रध्वजान् दृढान् | வெற்றிக் கொடிகளை |
| उच्छ्रित्य | உறுதியாக நாட்டி |
| संप्राप्त: मदन: अपि | (தனது ஆற்றலைக்காட்ட) வந்த மன்மதனும் |
| यस्य निटिलज्योति: पतङ्गायित: | எவருடைய நெற்றிக் கண்ணிலிருந்து வெளிப்பட்ட நெருப்புப் பொறியால் விட்டில் பூச்சிபோலாகி எரிக்கப்பட்டானோ |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

முன்போல் அர்த்தம் செய்து கொள்ளவும்.

**விளக்க உரை:**

'मदनोऽपि' என்னுமிடத்தில் 'अपि' என்னும் பதத்தின் சுவாரஸ்யம் கவனிக்கத் தக்கது.

மஹாவிஷ்ணுவின் மனத்திலிருந்து தோன்றியவன் மன்மதன். அக்காரணத்தாலேயே அவனுக்கு 'மனஸிஜன்' என்னும் பெயர் ஏற்பட்டது. அவன் தந்தையின் அனுமதியுடன் காசிக்குச் சென்று அங்கு சிவலிங்கத்தைப்

பிரதிஷ்டை செய்து, அதை பக்தியுடன் ஆராதனை செய்துவந்தான். அதனால் மகிழ்ந்த மஹேசன் அவனை மதனராஜனென்று நியமித்து, தென்றலை ரதமாகவும், கிளியை வாகனமாகவும கொடுத்தருளினார். இவ்வரலாற்றைச் சங்கர ஸம்ஹிதை எனும் நூலில் காணலாம்.

மஹேசனருளால் சராசரங்கள் அனைத்தையுமே தனக்கு அடிமையாக்கும் ஆற்றலைப் பெற்றான். ஸரஸ்வதி, லக்ஷ்மி முதலான நாரீமணிகள் ரூபமான வெற்றிக் கொடிகளை நிலையாக நாட்டினான்.

இதனால் அஹந்தை மிகுந்த அவன், வரமளித்த மஹேசனிடமே தனது ஆற்றலைக் காட்டத் துணிந்தான். ஆனால், அந்தோ பரிதாபம்! எரியில் விழுந்த விட்டில் போல நெற்றிக்கண்ணால் எரித்துச் சாம்பலாக்கப் பட்டான்.

(5) அவதாரிகை:

"மதனனை அவனது ஆணவத்திற்காகத் தண்டித்த பரமேச்வரன், தன்னை பக்தியுடன் வணங்கும் எல்லா உயிர்களுக்கும் முக்திசுகத்தை அளிக்கின்றான்" என்பதை இப்பாடலால் விளக்குகின்றார்:-

यद्दातुं कृतलोभ एव परमं धाम स्वभक्तान्पुरा

काकुत्स्थोऽप्यतिसंदधे स भुवनान्यन्यानि सृष्ट्वा तदा।

आवेधोमशकं तदेव तृणवद्दत्तेऽविमुक्ते तु यः

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

काकुत्स्थः अपि — ஸ்ரீ ராமனும்

पुरा — முன் காலத்தில்

| | |
|---|---|
| यत् परमं धाम | வைகுந்தம் எனப்படும் எந்த உயர்ந்த பதத்தை |
| दातुं कृतलोभ: एव (सन्) | கொடுப்பதற்கு உதாரபுத்தி இல்லாதவனாய் |
| अन्यानि भुवनानि सृष्ट्वा | வேறு உலகங்களைச் சிருஷ்டி செய்து |
| तदा स्वभक्तान् अतिसंदधे | தான் வைகுந்தம் செல்லுகின்ற அந்த நேரத்தில் தன் பக்தர்களை வஞ்சித்தான். |
| तदेव | அதே உயர் பதத்தை |
| य: देव: | எந்த மஹேசன் |
| अविमुक्ते तु | அவிமுக்தம் என்னும் காசி க்ஷேத்ரத்திலோ |
| आवेधोमशकम् | பிரம்மன் முதல் சிறிய புழுவரை உள்ள எல்லா உயிர்களுக்கும் |
| तृणवत् दत्ते | புல்லுக்குச் சமானமாகக்கருதி அளிக்கிறாரோ |

स स्वामी मम दैवतं तदितर: नाम्नापि नाम्नायते॥

**விளக்க உரை:**

இந்த சுலோகத்தில் உள்ள விஷயத்திற்கு விளக்கம் பின்வரும் 9 ஆவது சுலோகத்திற்கான விளக்கத்தில் காணலாம்.

"அவிமுக்த ஸ்தலம் எனப்படும் காசி க்ஷேத்ரத்தில் பிராண வியோகம் ஆகும் ஜீவன்களுக்குப் பரமசிவன் தாரக மந்திரமாகிய 'ஓம் நமச்சிவாய' என்பதை

உபதேசம் செய்து மோக்ஷபதவி கிடைக்கச் செய்கிறார்" என்று ஜாபால உபனிஷத் கூறுகிறது."

अत्र हि जन्तोः प्राणेषु उत्क्रममाणेषु रुद्रः तारकंब्रह्म व्याचष्टे।
येन असौ अमृती भूत्वा मोक्षी भवति॥

**(6) அவதாரிகை:**

"பரமேச்வரனின் கேசமாகிய கபர்தத்தில் விழுந்த கங்காநதி அதில் ஒடுங்கியதாலேயே அவருடைய பாரம்யம் தெளிவாகிறது." என்பதை இப்பாடல் மூலம் விளக்குகிறார்:-

सेतुं यत्र निबध्य यत्र वसुधामुद्धृत्य मग्नां पुरा
विख्यातो मधुसूदनः स जलधिःयत्स्रोतसा पूरितः
सा जाह्नव्यपि यज्जटातनुशिखालम्बाम्बुलेशायिता
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| यत्र मधुसूदनः | எந்த சமுத்திரத்தில் ஸ்ரீராமன் |
| सेतुं निबध्य | அணையைக் கட்டியும் |
| यत्र पुरा | எந்த சமுத்திரத்தில் முன்னால் |
| मग्नां वसुधां | மூழ்கியிருந்த பூமியை |
| उद्धृत्य | மேலே தூக்கி வந்தும் |
| विख्यातः | மிகுந்த கீர்த்தியை அடைந்தாரோ |
| सःजलधिः अपि | அந்தக் கடலும் கூட |
| यत्स्रोतसा पूरितः | எந்த கங்கையின் நீரால் நிரப்பப்படுகிறதோ |
| सा जाह्नवी अपि | அந்த கங்கையும் |

यज्जटा - எந்த பரமேச்வரருடைய

तनुशिखालम्बाम्बुलेशायिता ஜடாமண்டலத்தில்
விழுந்து நீர்த் திவலை போல்
காணாமல் போனதோ

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते।

*விளக்க உரை:*

மஹாவிஷ்ணு ராமாவதாரத்தில் ஸேதுபந்தனம் செய்ததும், கடலில் மூழ்கிய வேதங்களையும், பூமியையும், மத்ஸ்யாவதாரத்தில் வெளியில் கொண்டு வந்ததும் புராணப் பிரஸித்தமான விருத்தாந்தங்கள்.

கங்கா நதியினால் ஸமுத்திரம் நிரப்பப்படும் விருத்தாந்தம் மஹாபாரதத்தில் வனபர்வாவில் (அத்- 104 - 109) காணப்படுகிறது.

அகஸ்த்ய முனிவரால் பருகப்பட்டதும் எல்லா ஜந்துக்களுக்கும் உபகாரமாயிருந்த சமுத்திரத்தை மறுபடியும் தண்ணீரால் நிரப்ப உபாயம் யாது? என்று தேவர்கள் வினவ, பிரம்மா, மஹேசனின் ஜடையிலிருந்து வெளிவந்த கங்கா ஜலத்தினால் அது ஸாத்தியமென்று பதிலுரைத்தார்.

அத்தகைய கங்கையும் எந்த சிவனுடைய ஜடாமண்டலத்தில் விழுந்து காணாமற் போயிற்றோ அத்தகைய சிவனுடைய பாரம்யம் (உயர்வு) எத்தகையது என்பது தெளிவாகும்.

(7) அவதாரிகை:-

இதர தெய்வங்களை ஆராதிப்பது மிகவும் சிரமம். அவ்வாறு ஆராதித்தாலும் முடிவில் அடையும் பலனும் அல்பமே.

ஆனால், பரமசிவன் பக்தன் விஷயத்தில் மிகுந்த கருணை உடையவர். பக்தனுக்கு சிரமம் கொடுக்காம

லேயே எளிதில் பரம ஆனந்தத்தைக் கொடுக்கிறார் என்பதை இப்பாடல் விளக்குகிறது.

दातव्यस्त्रिदिवः प्रतिक्षणपरिक्षीणः समस्तैः सुरैः
तद्दानाय च ते कियत्कियदिव व्यापारयन्ते जनान्।
अक्षय्यं पदमाप्यमत्र च सकृद्यत्कीर्तनं साधनं
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| समस्तैः सुरैः | எல்லா தேவர்களாலும் |
| प्रतिक्षणपरिक्षीणः: | ஒவ்வொரு நொடியும் கரைந்து கொண்டே வரும் |
| त्रिदिवः दातव्यः | சுவர்க சுகம் கொடுக்கப்படக் கூடியது. |
| तद्दानाय च | அதைக் கொடுப்பதற்குக்கூட |
| ते | அந்த தேவர்கள் |
| जनान् | ஜனங்களை |
| कियत्कियदिव | எந்தெந்த விதமாகவெல்லாம் |
| व्यापारयन्ते | ஏவுகின்றனர் |
| अत्र सकृत् यत्कीर्तनं | (அதே நேரத்தில்) இங்கு ஒரே ஒரு தடவை எவருடைய நாமாவைக் கூறுவது |
| अक्षय्यं पदं आप्यं | (உடனேயே) அழிவற்ற நிலையை அடைவிக்கும் |
| साधनं | ஸாதனமாக அமைகிறதோ |

स स्वामी मम दैवतं तदितरः नाम्ना अपि न आम्नायते॥

*விளக்க உரை:*

*சுவர்க பலனை அடைவதற்குக் கஷ்டமான கர்மாக்களின் மூலம் தேவர்களை ஆராதிக்க வேண்டும். ஆனால், இவ்வளவு சிரமத்தின் பயனாக அடையப் பெறும் யோகம் அனுபவிக்க அனுபவிக்க கரைந்து முடிவில் அழிவுறுகிறது.*

तद्यथेह कर्मचितो लोक: क्षीयते — एवमेव अमुत्र पुण्यचितो लोक:

*என்பது சாந்தோக்ய உபநிஷத் (8–1). உலக மக்கள் இந்த முயற்சியில் வீணாய் ஈடுபட்டு, திரவியத்தையும் செலவு செய்து, காயக்கிலேசமும் ஏன் செய்து கொள்ள வேண்டும்? அழிவற்ற ஆனந்த நிலையை அடைவதற்கு எளிதானதோர் உபாயமிருக்கின்றதே – அதுதான் "சிவ" என்னும் ஈரெழுத்து நாமாவைக் கீர்த்தனம் செய்தல்.*

अथहैनं ब्रह्मचारिण ऊचु:। किं जप्येन अमृतत्वं ब्रूहि इति स होवाच याज्ञवल्क्य:। शतरुद्रीयेणेति। एतानि हवा अमृतस्य नामधेयानि भवन्ति एतैर्हवा अमृतो भवति।

*ஜாபால உபநிஷத் (3) கூறுகிறது. "எந்த ஜபத்தினால் அழிவற்ற ஆனந்த நிலையை அடையலாம்" என்று வினவிய பிரம்மசாரிகளிடம் யாக்ஞ்யவல்க்யர், "சதருத்ரீ" எனும் மந்திரத்தை ஓதி அந்நிலையைப் பெறலாம் என்று பதிலுரைக்கின்றார்.*

यद् द्व्यक्षरं नाम गिरेरितं नृणां सकृत् प्रसङ्गात् अघं आशु हन्ति तत्॥

*"சிவ" என்னும் ஈரெழுத்து நாமம் பேச்சின் இடையில் ஒரு தடவை உச்சரிக்கப்பட்டாலும் அது விரைவில் பாவத்தைப் போக்கும்." (பாக–4–4–14)*

विद्यासु श्रुतिः उत्कृष्टा तत्रैकादशिनी श्रुतौ।
तस्य पञ्चाक्षरी तस्यां शिव इत्यक्षरद्वयम्॥।

இந்த 'சிவ' என்னும் திருநாமமே

यज्जीवरत्नं अखिलागमलालनीयम्

என்று 'ப்ரம்ம தர்க்க ஸ்வதம்' எனும் நூலில் (27) ஜீவரத்னமாகக் கொண்டாடப்படுகிறது.

(8) அவதாரிகை:

வேதங்களில் ஏதோ ஒரு விதமாகச் சிற்சில மந்திரங்களில் தாங்கள் விளக்கப்பட்டிருப்பதால் தேவர்கள் மிகப் பெருமிதம் அடைகின்றனர். அவ்வேதங்களே எவருடைய மாளிகை வாசலில் காவல் நாய்களாய் நிற்கின்றனவோ, அப்பரமேச்வரனின் பெருமையை யார் அளவிட முடியும் என்று இப்பாடலில் விளக்குகிறார்.

मन्त्रो वा क्वचिदर्थवादशकले दिष्ट्या गृहीते सकृत्
स्वे नाम्नि त्रिदशा वहन्ति महतीं कीर्तिं यदीयोक्तिषु॥
श्वानस्ते निगमा यदीयभवनद्वारे चरन्ति स्वतः
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| त्रिदशाः | தேவர்கள் |
| अर्थवादशकले मन्त्रे वा | அர்த்தவாத பரமான பாகங்களிலோ மந்திரங்களிலோ |
| दिष्ट्या | அகஸ்மாத்தாய் |
| यदीयोक्तिषु | எந்த வேத வாக்யங்களில் |
| स्वेनाम्नि गृहीते | தமது பெயர்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டதில் |

| | |
|---|---|
| महतीं कीर्तिं वहन्ति | பெரும் புகழைப் பெறுகின்றனரோ |
| ते निगमा: | அந்த வேதங்கள் |
| यदीय भवनद्वारे | எவருடைய மாளிகை வாசலில் |
| स्वत: श्वान: चरन्ति | தாமாகவே நாய்களாக (காவலாக) நடமாடுகின்றனவோ |

स स्वामी मम दैवतं तदितर: नाम्ना अपि न आम्नायते॥

***விளக்க உரை:***

*அர்த்தவாதபரமாக உள்ள சில வேதமந்த்ரங்களில் சில தேவர்கள் துதிக்கப்படுகிறார்கள். ஆனால் அம்மந்திரங்களின் பரம தாத்பர்யம் அந்த தேவதைகளைத் துதிப்பதில்லை. முதல் சுலோகத்தின் விளக்க உரையில் குறிப்பிட்டது போல்*

यस्मै नमस्तच्छिर:

*என்றபடி எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியான சிவ பெருமானையே அவை சென்றடையும். அவ்வாறு இருந்தும் தங்கள் பெயர் வேதங்களில் கூறப்படுகின்றன என்ற காரணத்தாலேயே தங்களைப் பெருங்கீர்த்தி உடையவர்களாகக் கருதுகின்றனர். ஆனால், அவர்களுக்கு இப்பெருமையை அளிக்கும் வேதங்கள் மஹேசனின் மாளிகை வாசலில் தாங்களாகவே நாய்களாகக் காவல் புரிகின்றன என்றால், அம்மஹேசனின் மஹிமையை யார்தான் வருணிக்க முடியும்.*

**(9) *அவதாரிகை:***

*பரமசிவன் ஒருவரே காலத்தினால் பாதிக்கப்படாதவர். ஆதலால், எல்லா வேதங்களும் நித்திய வஸ்துவான அவரையே தங்களின் முடிவான*

*பொருளாக விளக்குகின்றன என்பதைக் கீழ்வரும் பாடலால் விளக்குகிறார்.*

य: सान्तानिकलोकदस्तनुभृतां य: सर्वलोकेश्वर:
सोऽप्याहूयत मर्त्यभावभजनात्काले न कालेन किम्।
तादृक्षोऽपि स कस्यचिद्द्विजवटोस्त्राणाय येनाहत:
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| य: तनुभृतां सान्तानिक-लोकद: | எவர் (தம்மை அண்டிய) மக்களுக்கு ஸாந்தானிகம் எனும் லோகத்தை அளித்தாரோ |
| य: सर्वलोकेश्वर: | எவர் உலகங்கள் அனைவற்றிற்கும் ஈச்வரனோ |
| स: अपि | அந்த ராமனும் கூட |
| मर्त्यभावभजनात् | மனித ஜன்மாவை எடுத்ததால் |
| काले | காலம் முடிந்ததும் |
| कालेन न आहूयते किं? | யமனால் அழைக்கப்படவில்லையா ? |
| तादृक्ष: स: अपि | அப்படிப்பட்ட காலனும்கூட |
| कस्यचित् द्विजवटो: | ஒரு பிராமணச் சிறுவனைக் |
| त्राणाय | காப்பதற்காக |
| येन आहत: | எந்த மஹேசனால் அழிக்கப்பட்டானோ |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

விளக்க உரை:

"ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி தாம் பரமபதம் செல்லும் போது தம்முடன் வந்த மக்களுக்கும் மற்றுமுள்ள உயிர்களுக்கும் உயர்ந்த லோகத்தை அளிக்கும்படி பிரம்மதேவனை வேண்ட அவர் அவ்வுயிர்களுக்கு "ஸாந்தானிகம்" எனும் உலகங்களை வழங்கினார்" என்று ராமாயணம் உத்தரகாண்டம் கூறுகின்றது (ஸர்கம் 110–8–20)

இந்த ஸாந்தானிகம் எனும் உலகங்கள் பிரம்ம லோகத்திற்கு நிகரானதாக, அதற்கு அருகிலுள்ளது என்ற செய்தியை

सर्वैर्ब्रह्मगुणैर्युक्ते ब्रह्मलोकादनन्तरे

என்ற வாக்யம் நமக்கு உணர்த்துகிறது.

ஸ்ரீ ராமர் உலகங்களுக்கெல்லாம் ஈச்வரன். அத்தகைய பெருமை உடையவராயினும் மானிடனாகப் பிறந்த காரணத்தால் பதினோறாயிரம் ஆண்டுகள் ஆண்டபின் காலனால் அழைத்துச் செல்லப்பட்டார். அத்தகைய காலனையும், தம்மைச் சரணடைந்த அந்தணச் சிறுவனான மார்க்கண்டேயனைக் காப்பதற்காக மஹேச்வரர் அழித்தார்.

यो वामपादेन जघान कालं

என்னும் சரபச்ருதி(11) இதனைத் தெளிவு படுத்துகிறது. அதனாலேயே பரமேச்வரன் 'காலகாலன்', 'காலாதீதன்' என்றெல்லாம் வழங்கப்படுகிறார்.

अजात इत्येवं कश्चिद्भीरुः प्रपद्यते

என்று ச்வேதாச்வதர உபநிஷத்தும் குறிப்பிடுகிறது. அதனால் பரமேச்வரர் ஒருவரே காலாதீதர். அவர் பிறப்பற்றவர். அவரே ஸர்வலோக சரண்யர். அவரைச் சரணடைந்தவரிடம் காலனும் அண்டமாட்டான் இதனைக் கவிவிடம்பனம் (101) எனும் நூல்

कामममस्तु जगत्सर्वं कालस्यास्य वशंवदम्।
कालकालं प्रपन्नानां काल: किं न: करिष्यति।।

என அழகாக விளக்குகிறது.

(10) அவதாரிகை:

"இவ்வுலகிலும் ஒருவர் விரும்புவதை எல்லாம் அளிக்க வல்லவர் மஹேசனேயன்றி மற்றவர் இல்லை" என்பதை இப்பாடல் மூலம் விளக்குகிறார்.

कस्मैचिद्द्विजबन्धवे कियदपि क्षीरं पुरा याचते
दत्तो येन दयारसैकवपुषा दुग्धोद एवार्णव:
श्रीश्रीवल्लभकल्पपादपसुधाचिन्तामणीभि: समं
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते।।

| | |
|---|---|
| पुरा कियदपि क्षीरं याचते | முன்பு எவ்வகையிலும் பாலை வேண்டிய |
| कस्मैचिद् द्विजबन्धवे | ஒரு அந்தணனுக்கு |
| येन दयारसैकवपुषा | எந்த கருணாமூர்த்தியான சிவனால் |
| श्रीश्रीवल्लभकल्प- पादपसुधाचिन्तामणीभि: समं | மஹாலக்ஷ்மி, விஷ்ணு, கற்பகதரு, அமிர்தம், சிந்தாமணி ஆகியவைகளுடன் |
| दुग्धोद: अर्णव एव दत्त: | பாற்கடலே அளிக்கப்பட்டதோ |

स: स्वामी मम दैवतं तदितरो नाम्ना अपि न आम्नायते।।

விளக்க உரை:

பரமேச்வரனுடைய எல்லையற்ற கருணையை விளக்கும் உபமன்யு உபாக்யானம் இங்கு சுருக்கமாகக் குறிப்பிடப்படுகிறது. சிவபுராணம் வாயவீய ஸம்ஹிதை

பூர்வபாகம் 34–35 ஆகிய அத்யாயங்களில் இந்த உபாக்யானம் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

முன்னொரு காலத்தில் பால் பருக வேண்டும் என்ற ஆசையினால் அழுது கொண்டிருந்த உபமன்யு, தாயின் உபதேசப்படி பரமேச்வரனைக் குறித்துத் தவமிருந்தார். தவத்தின் பயனாய் நேரில் தோன்றிய இறைவனிடம் தன் விருப்பத்தைத் தெரிவிக்க, தயாநிதியாகிய ஈசன், லக்ஷ்மி, விஷ்ணு, கற்பகவிருக்ஷம், அமிருதம், சிந்தாமணி ஆகியவைகளுடன் பாற்கடலையே அவருக்கு அளித்தார்.

இவ்வாறு அன்பர்களின் விருப்பத்திற்கு அதிகமாகவே அளித்து அருளும் இறைவன் சிவபெருமான் ஒருவரே. எனவே, இவரே முழு முதற்கடவுளாவார். அதனாலேயே இவரே எனது தெய்வம். வேதங்களும் சிறப்புடைய இறைவனையே புகழ்கின்றன.

(11) அவதாரிகை:

பாசத்தை அகற்றும் சிவனே எல்லோராலும் வழிபடத் தக்கவர். அவரே பசுபதியாவார். மற்றவை அனைத்தும் பசுக்களே. எனவே பசுக்களாக உள்ள பிற தெய்வங்களை வழிபடுவதால் பயனொன்றும் கிடையாது. இந்த உண்மையைக் கீழ்வரும் செய்யுளில் வினாவிடை ரூபமாக விளக்குகிறார்.

केनास्मानतिशेरते दिविचरा: श्रुत्या गृहीता हि ते

किं नास्मान् श्रुतिराह तान् परतया ब्रूते किमस्मान् स्वकान्।

सर्वे चेत्पशवो वयं किमितरै: सर्वस्य यो मोचक:

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

दिविचरा: केन अस्मान् अतिशेरते — தேவர்கள் எக்காரணத்தால நம் அனைவரையும் விஞ்சியவர்கள் ஆகின்றனீர் ?

ते श्रुत्या गृहीता: हि — அவர்கள் வேதத்தினால் புகழப்படுகிறார்கள் அல்லவா

किं श्रुति: अस्मान् न आह? — வேதம் நம்மை ஏன் குறிப்பிடவில்லை?

तान् परतया ब्रूते — அவர்கள் சிறந்தவர்களாக இருப்பதால் அவர்களைப் (புகழ்ந்து) கூறுகிறது.

(तान् परतया ब्रूते என்பதற்கு, "அவ்வானவர்கள் மற்றவர்களாக (தன்னைச் சாராதவர்களாக) உள்ளதால் அவர்களைப் பற்றிக் கூறுகிறது" எனப் பொருள் கொண்டு)

अस्मान् स्वकान् इति ब्रूते किं? — (அப்படியானால்) நம்மையெல்லாம் தன்னைச் சார்ந்தவர்கள் என்று கூறுகிறதா?

(என்று இவ்வாறு வினா எழுப்பினால், அதற்கு மௌனமாக இருப்பதைத் தவிர வேறு என்ன விடை பகர முடியும்? அத்தகைய நிலையில் தாமே விளக்கம் தருகிறார்)

वयं सर्वे पशव एव चेत् — தேவனோ மனிதனோ அனைவருமே பசுக்கள்தாம் என்று கூறுவதே பொருத்தம் என்றால்

इतरै: किम्? — சிவபெருமானைத் தவிர்த்த நம் போன்ற பசுக்களாக உள்ள

பிற தெய்வங்களால் என்ன பயன்?

सर्वस्य मोचक: य: — அனைவரையும் பந்த பாசங்களிலிருந்து விடுவிக்கக் கூடிய பதியாக எந்தப் பரமசிவன் இருக்கிறாரோ

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

**விளக்கவுரை:**

"சிவனைத் தவிர்த்த பிற தெய்வங்கள் மற்ற உயிர்களினும் மேலானவர்கள் என்று கூறக் காரணம் என்ன?" என்ற வினாவிற்கு, "அவர்களை வேதம் புகழ்கின்ற காரணத்தால் நம்மைவிட மேலானவர்கள்" என்று விடை கூறலாம். ஆனால்,

"நம்மை ஏன் வேதம் குறிப்பிடவில்லை" என ஒரு வினா எழுப்பினால், அதற்கு "தேவர்கள் உயர்ந்தவர்களல்லவா! அதனால் அவர்களை வேதம் புகழ்கிறது" என்று விடை கூறினால் அது சரியான விடையாகுமா?

வேதத்தில் புகழப்படுவதால் வானவர்க்கு உயர்ச்சியா? அன்றி, உயர்ந்தவர்களாக இருப்பதால் அவர்களை வேதம் புகழ்கின்றதா? எது பொருத்தம்?

வேதம் சிற்சில இடங்களில் பிற தேவதைகளை புகழ்கிறது. அர்த்தவாதபரமாக உள்ள மந்திரத்திற்கு இந்த தேவதைகளைப் புகழ்வதில் நோக்கமில்லை.

यस्मै नमस्तांच्छर:

என்று முன்கூறிய விளக்கத்தின்படி அனைவற்றுள்ளும் அந்தர்யாமியாக உள்ள பரமேச்வரனையே அப்புகழ்ச்சிகள் சென்றடையும்.

அதனால், வேறு தேவதைகளின் பெயர்கள் வேதத்தில் கூறப்படுவதாலேயே அவர்களுக்கு உத்கர்ஷத்வம் உள்ளது எனக் கருதுவது பொருந்தாது என்பதை அழகாக,

तान् परतया ब्रूते

என்பதற்குப் பதவுரையில் கூறியபடி, வேறு விதமாகப் பொருள் எடுத்துக் கொண்டு வினவுவது போல் வினவி. வேதத்தில் பெயர் குறிப்பிடப் படுவதாலேயே தேவதைகளுக்கு உயர்வு வந்து விடாது. ஏனெனில், அவர்களும் நம்மைப்போன்ற பசுக்களே. (பந்த பாசங்களில் கட்டுப்பட்டவர்களே) அதனால், அவர்களை உபாசிப்பதால் என்ன பயன்? தங்களையே விடுவித்துக் கொள்ள முடியாத பசுக்களாகிய அவர்கள், நம்மை எங்ஙனம் வீடுபேற்றை (மோக்ஷத்தை) அடைவிக்க முடியும்?

ஆகவே, தேவனோ, மானுடனோ மற்றுமுள்ள சராசரங்களில் அடங்கிய ஏனைய எவ்வுயிராயினும் சரி, அவற்றின் துன்பங்களை போக்கி, விடுதலையை (வீடு பேற்றை) அளிக்கும் வல்லமை படைத்த பசுபதியாக விளங்குபவர் பரமேச்வரன் ஒருவரே. அதனால், ஸர்வ உபாஸ்யராக விளங்கும் பெருமை அப்பரமேச்வரன் ஒருவரையே சாரும்.

(12) அவதாரிகை:

இரட்டுற மொழிதலாக (சிலேடையாக) பரிசங்க்யா அலங்காரத்துடன் இப்பாடலில் பரமேச்வரனைப் புகழ்ந்து கூறுகிறார்.

बाणो यस्य न बाणकर्म सहते चक्रे तु ये द्वे तयोः

एकं चक्रकुलप्रतीपमितरच्चक्रानुकूलक्रियम्।

ज्या तु ज्यां शिरसा बिभर्ति भुवने सूतो न सूतः क्वचित्
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| यस्य बाणः | எவருடைய அம்பு |
| बाणकर्म न सहते | பாண(னின்)த்தின் செயலைப் பொறுக்கவில்லையோ |
| द्वे चक्रे तु ये | (எவருடைய தேரின்) இரு சக்கரங்களாக எவை உள்ளனவோ |
| तयोः एकं चक्रकुल-<br>-प्रतीपं | அவைகளுள் ஒன்று சக்ரகுலத்திற்கு விரோதியாகவும், |
| इतरत् चक्रानुकूलक्रियं | மற்றொன்று சக்ரகுலத்திற்கு நலம் புரியும் நண்பனாகவும் (உள்ளனவோ) |
| भुवने ज्या तु ज्यां शिरसा बिभर्ति | (எவருடைய வில்லின் ஞாண்கயிறு ஞாண் கயிற்றை (பூமியை)த் தன் தலையால் தாங்குகிறதோ |
| सूतः क्वचिदपि न सूतः | (எவருடைய) தேரோட்டி ஓரிடத்திலும் ஒருக்காலும் ஸாரதியாக இருந்ததில்லையோ |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

**விளக்கவுரை:**

திரிபுர ஸம்ஹார காலத்தில் பரமேச்வரனுக்கு மஹாவிஷ்ணு அம்பாகவும், சூர்ய சந்திரர்கள் தேர்ச் சக்கரங்களாகவும், பிரம்மா ஸாரதியாகவும் அமைந்து தொண்டு புரிந்தனர்.

रथोभूः ज्याफणी शौरिः शरश्चापो गिरिर्हयः
त्रयी रथाङ्गे चन्द्रार्कौ ब्रह्मा भवति सारथिः॥

இந்த விபரங்களை உட்பொருளாக அமைத்து வெகு சுவாரஸ்யமாக, (பரிஸங்க்யா அலங்காரத்தின் மூலம்) சுலோகத்தை அமைத்துள்ளார்.

| | |
|---|---|
| बाणः | என்பது அம்பையும் பாணாசுரனையும் |
| चक्रः | என்பது சக்கரத்தையும், சக்ரவாக பக்ஷியையும் |
| ज्या | என்பது ஞாண்கயிற்றையும், பூமியையும் |
| सूतः | என்பது ஸாரதியையும் பிறந்தவனையும் |

குறிக்கின்றன. இவ்வாறு இரட்டுற மொழிதல் எனும் சிலேஷாலங்காரத்தின் துணை கொண்டு சுலோகத்திற்கு சுவாரஸ்யத்தை அளிக்கிறார்.

"பாணம் எய்தால் அது தனது குறியைத் தாக்கிப் பிளக்க வேண்டும். ஆனால், மகேசனின் பாணம் அவ்வாறு தனது செயலைச் செய்ய விரும்பவில்லை" என்று கூறுவதுபோல் கூறித் தனது உட்கருத்தாகிய "பாணாசுரனுடைய அடாத செயலைப் பொறாத மகேசனது அம்பாக விளங்கும் மஹாவிஷ்ணு அவனை சிக்ஷித்தார்" எனும் செய்தியை விளக்குவது சுவைத்தற்பாலது.

தேர் தனது இலக்கு நோக்கிச் சீராகச் செல்ல வேண்டுமானால் சக்கரங்கள் இரண்டும் சீராக இயங்க வேண்டும். ஒரு சக்கரம் பின்னோக்கியும், மற்றொன்று முன்னோக்கியும், ஓடினால் தேரின் கதி என்னவாவது?

அவ்வாறுதான் அமைந்துள்ளது மஹேசனின் தேர்ச் சக்கரங்கள்'' என்று கூறுவது போலக் கூறித் தனது கருத்துத்திறனை விளக்குகிறார். அதாவது:-

மஹேசனின் தேர்ச்சக்கரங்களில் ஒன்றாகித் தொண்டு புரிபவன் சந்திரன். அவன் சக்கரவாகப் பக்ஷிகளுக்கு விரோதி.

மற்றொரு சக்கரமாகித் தொண்டு புரிபவன் சூரியன். அவன் சக்கரவாகப் பறவைகளின் நண்பன் என்பதை நயம்பட உரைக்கிறார்.

ஈசனின் வில்லில் உள்ள ஞாண்கயிறு தன்னைத் தானே தலையால் தாங்குகிறது'' என விசித்திரமான செய்தியைக் கூறுவது போல்,

ஈசனது வில்லில் ஞாண்கயிறாக விளங்கும் ஆதிசேஷன் தம் தலையால் பூமியைத் தாங்குகிறான் எனும் செய்தியை அழகாக விளக்குகிறார்

இறுதியாக "ஒருவர்க்கும் ஒரு நேரத்திலும் தேரோட்டியாக இருந்து பழக்கப்படாத ஒருவன் (தேரோட்டத் தெரியாத ஒருவன்) மகேசனுக்கு ஸாரதியாக இருந்தான்'' என்று கூறுவார் போன்று, 'பிறந்தறியாப் ப்ரமன் மஹேசனின் தேரோட்டியாக விளங்கினான்' எனச் சுவைபட விளக்குகிறார்.

மகேசனின் தேரோட்டியாகிய பிரமன், பிறக்கவில்லை. ஏனெனில் அவன் பிறவாதவன்.

என இவ்வாறு விசித்திரமாக உள்ள பாணத்தையும், தேர்ச்சக்கரங்களையும், ஞாண் கயிற்றையும், ஸாரதியையும் கொண்ட வேறு தெய்வத்தை எங்கேனும் காண முடியுமா?

ஆகையால், இத்தகைய பெருமையுடைய மஹேச்வரனே தலைவனாக விளங்கும் முழுமுதற் கடவுள்.

(13) *அவதாரிகை:*

"யக்ஞபதியாகிய ஹரனுக்கு அவமரியாதை செய்தோர் அனைவருமே பெரும் இன்னல்களுக்கு ஆளாகி வருந்தினர்" என்பதை கீழ்வரும் பாடலால் விளக்குகிறார்:-

क्रत्वात्मा पुरुष: क्रतु: क्रतुभुजो वक्ता क्रतूनां क्रतो:

आधार: क्रतुकालकल्पनपरौ सर्वेऽप्यमी संहता।

यस्यातिक्रमत: सह क्रतुकृता भ्रष्टाश्च नष्टा: क्षणात्

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| क्रत्वात्मा पुरुष: | யக்ஞ புருஷனாகிய மஹாவிஷ்ணு |
| क्रतु: | யாகம் |
| क्रतुभुज: | ஹவிர்பாகத்தைப் பெறும் இந்திராதி தேவர்கள் |
| क्रतूनां वक्ता | யாக மந்திரங்களைக் கூறும் புரோஹிதன் |
| क्रतो: आधार: | யாக குண்டம் யாகசாலை முதலியன |
| क्रतुकालकल्पनपरौ | யாகம் செய்வதற்கு உரிய காலத்தை நிர்ணயிக்க உதவும் சூர்ய சந்திரர்கள் |
| अमी सर्वे | இவர்கள் யாவரும் |
| क्रतुकृता सह | யாகத்தை நடத்தும் யஜமானனுடன் சேர்ந்து |
| यस्य अतिक्रमत: | எவருக்கு அவமரியாதை செய்ததனால் |

क्षणात् संहता: नष्टा: भ्रष्टा: च — ஒரு நொடியில் அழிக்கப்பட்டும் வைதிக நெறியிலிருந்து விலக்கப்பட்டும் துன்பம் அடைந்தாரகளோ

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

**விளக்கவுரை:**

தக்ஷயக்ஞ வரலாறு இங்கு கூறப்படுகிறது. மஹேசனது மஹிமை அறியாத தக்ஷன், அவரைத் தனது மருமகன் என்பதையும் கருதாது அவரை உதாசீனம் செய்தான். தான் தொடங்கிய ஒரு யாகத்திற்கு அவரை அழைக்காமலே அதனை நடத்த ஆரம்பித்தான்.

அழைப்பில்லாமலிருந்தும், தந்தைபால் கொண்ட அபிமானத்துடன் வந்த தாக்ஷாயணியைத் தன் மகள் எனவும் பாராமல் அவளது கணவராகிய பரமசிவனைப் பலவாறு நிந்தனை செய்தான். அதனால் சினம்மிகக் கொண்ட தாக்ஷாயணி தனது தேஹத்தை யோக அக்னியால் அவ்வேள்விச் சாலையிலேயே தியாகம் செய்தாள்.

இச்செய்தியறிந்த சிவபெருமான் ருத்ரமூர்த்தியாகிச் சினத்துடன் வீரபத்ரனைப் படைத்து தக்ஷயாகத்தை அழித்து வருமாறு அனுப்பினார். வீரபத்ரரும் ருத்ர கணங்களும் யாகசாலையில் புகுந்து அங்கிருந்த தக்ஷன், ருத்விக்குகள், தேவதைகள் அனைவரையும் அழித்தும் வருத்தியும் யாகத்தை அழித்தனர். எனவே 'சிவாபராதம் செய்வது அழிவிற்குக் காரணம் ஆகும். சிவாபராதம் செய்வர் அழிவர்' என்பதை இதன்மூலம் அறியலாம்.

**(14) அவதாரிகை:**

"தனது பகைவர்களை அழிக்கின்ற ருத்ரமூர்த்தி, தன்னை அண்டி அடியார்களாகிய தேவர்களின் ஸகல

ஸம்பத்திற்கும் காரணமான அனுக்ரஹத்தை வழங்கியவர்" என்பதை இப்பாடலில் விளக்குகிறார்:-

आरोढुं वरमौपवाह्यमपहर्तुं सुन्दरी: कन्यका
भोक्तुं भोज्यमुपस्थितं सुखमलंकर्तुं च रत्नैस्तनुम्।
सन्नह्यन्त्यमृतान्धसो हि शमिते येनैव हालाहले
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते।।

| | |
|---|---|
| हालाहले. | ஹாலாஹலம் எனும் கொடிய விஷம் |
| येन शमिते एव | எவரால் சமனம் செய்யப்பட்டதாலேயே |
| वरं औपवाह्यं आरोढुं | சிறந்த ஐராவதம் உச்சைச்ரவஸ் ஆகியவற்றில் ஏறிச் சவாரி செய்யவும் |
| सुन्दरी: कन्यका: अपहर्तुं | அழகிய அப்ஸரஸ் ஸ்திரீகளை அபஹரிக்கவும் |
| उपस्थितं भोज्यं भोक्तुं | வெளித்தோன்றிய அமிருதத்தைப் பருகவும் |
| रत्नै: तनुं सुखं अलंकर्तुं च | சிந்தாமணி முதலிய ரத்னங்களால் தம்முடலை அலங்கரித்துக் கொள்ளவும் |
| अमृतान्धस: सन्नह्यन्ति | தேவர்கள் தயார் ஆனார்களோ |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते।

**விளக்க உரை:**

அண்டங்கள் அனைத்தையும் அழிக்கத் தோன்றிய ஹாலாஹல விஷத்தைக் கண்டு வானவர்கள் அனைவருமே அஞ்சி ஓடத் தொடங்கியபோது,

'அஞ்சேல்' என்று அபயக்குரல் கொடுத்துக் கொண்டே தோன்றிய மஹேசன் அக்கொடிய விஷத்தை ஒரு நாவற்கனியைப் போல் உள்ளங்கையில் தாங்கிப் பருகினார். இத்தகைய செயற்கரிய செயல்புரிந்த மஹேசனைப் புராணங்களும் காவியங்களும் 'கருணாமூர்த்தி' எனவும், 'கருணைக்கடல்' எனவும் பலவாறு புகழ்ந்து கூறுகின்றன.

निष्क्रान्ते गरले द्रुते सुरगणे निश्चेष्टिते विष्टपे,
मा भैष्टेति गिराविरास धुरि यो देवस्तमेव स्तुमः

என்று இவ்வாறு புகழ்ந்து பேசப்படக்கூடிய பெருமையை உடையவர் பரமசிவன் ஒருவரே. எனவே அவரையே நாங்கள் புகழ்ந்து பாடுவோம் என்று நீலகண்ட தீக்ஷிதர் அவர்கள் புகழ்ந்து பரமேச்வரனுடைய இந்த லீலையை விளக்க, 'நீலகண்ட விஜயம்' என்ற சம்பூ காவ்யத்தையே இயற்றி விட்டார்.

"பத்து திசைகளிலும் பரவுகின்ற ஹாலாஹல விஷ வேகத்தைத் தாங்கவும் முடியாமல், அதனைப் போக்கவும் முடியாமல் மூவுலகினரும் காப்பவர் எவருமின்றி வருந்தித் துடித்து, இத்தகைய ஆபத்திலிருந்து காக்கும் வல்லமை உடையவர் மஹேச்வரன் ஒருவரே எனத் தெரிந்து, அவரைப் பணிந்து சரணடைந்தனர்" என்று பாகவதம் பகர்கிறது.

பகவானின் இவ்வரிய செயலை ஸ்ரீசங்கர பகவத்பாதர் அவர்கள், தமது சிவானந்த லஹரியில்,

नालं वा परमोपकारकमिदं त्वेकं पशूनां पते
पश्यन्कुक्षिगतांश्चराचरगणान्बाह्यस्थितान्रक्षितुं।
सर्वामर्त्यपलायनौषधमतिज्वालाकरं भीकरं
निक्षिप्तं गरलं गले न गिलितं नोद्गीर्णमेव त्वया।।

ஹே! பசுபதே! நீர் செய்த பரம உபகாரமான இது ஒன்று போதாதா? தேவர்கள் அஞ்சிச் சிதறி ஓடியபோது, ஹாலாஹலமாகிய கொடிய விஷத்தை விழுங்கினால் உந்தியில் உள்ள உலகங்கள் அழியு மென்றும், உமிழ்ந்தால் வெளியே உள்ள ஜீவராசிகள் அழியுமென்றும் உணர்ந்து, அதனைக் கழுத்திலேயே நிறுத்திக் கொள்ளவில்லையா? என்று போற்றுகிறார்.

गङ्गा धृता न भवता शिव पावनीति

नास्वादितो मधुर इत्यपि कालकूटः

संरक्षणाय जगतां करुणातिरेकात्

कर्मद्वयं कलितमेतदनन्यसाध्यम्॥

"கங்கை புனிதமானவள் என்பதற்காக நீர் அவளை முடியில் வைத்துக் கொள்ளவில்லை. ஹாலாஹல விஷம் மிகவும் சுவையானது என்பதற்காகத் தாங்கள் அதனைப் பருகவில்லை. அளவு கடந்த கருணையால் உலகங்களைக் காப்பதற்காகப் பிறரால் சாதிக்க முடியாத இவ்விரண்டு அரிய செயல்களையும் தாங்கள் செய்தீர்கள்" என்று மனம் கசிந்து பேசுகிறார் அப்பய்ய தீக்ஷிதர்.

இவ்வாறு ஹாலாஹல விஷத்தைப் பரமேச்வரன் பருகிய காரணத்தாலேயே, ஐராவதம் என்ற அபூர்வ வெள்ளையானை, உச்சைச்ரவஸ் என்ற அபூர்வ வெள்ளைக் குதிரை, கற்பகவ்ருக்ஷம், காமதேனு, அப்ஸர ஸ்திரீகள், விலைமதிப்பற்ற ரத்னங்கள் ஆகியவற்றைப் பெற்று வானவர்கள் மகிழ்கின்றனர்.

அதனாலேயே ஸ்ரீதீக்ஷிதர் அவர்கள், தமது நீலகண்ட விஜய சம்பூ காவ்யத்தில்,

भुञ्जीथा न हलाहलं यदि महादेव त्वमेवंविधं

भुञ्जीरन्किमिमे सुराश्चरुपुरोडाशादिहव्यं मखे॥

"ஹே! மஹாதேவ! உலகங்களை அழிக்க இருந்த ஹாலாஹல விஷத்தை நீர் இவ்வாறு பருகவில்லையேல், இந்த இந்த்ராதி தேவர்கள் யாகங்களில் தங்களுக்கு அளிக்கப்படும் ஹவிர்பாகத்தை எங்ஙனம் புசிக்க முடியும்? (அதாவது அவர்கள் அவ்விஷத்தினால் கபளீகாரம் செய்யப்பட்டிருப்பார்கள்)" என்றும், மஹேசனின் இச்செயற்கரிய செயலைப் புகழ்ந்து கொண்டாடுகிறார். இப்படிப்பட்ட கருணாமூர்த்தியாகிய பரமேச்வரனே என் ஸ்வாமி என்றும் பறை சாற்றுகிறார்.

(15) அவதாரிகை

'இவ்வாறு தனக்கென ஆசை ஏதும் இல்லாமல் லோகாதீதராக விளங்கும் பரமேச்வரன், தனது அடியார்களுக்கு அவர்கள் வேண்டும் அனைவற்றையும் அளிக்கும் தியாகராஜராகவும் விளங்குகிறார்' என்பதை இப்பாடல் மூலம் விளக்குகிறார்.

स्वं वासो दशधा विभज्य वितरन्नेकैकखण्डं पुरा
यश्चक्रे दश पाकशासनहुताशादीन्दिशामीश्वरान्।
यद्भिक्षाशनभागभाक्त्रिजगतामन्नप्रदात्री शिवा
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| यो देव: स्वं वास: | எந்த ஈசன் தம் ஆடையை |
| दशधा विभज्य | பத்தாகப் பகிர்ந்து |
| एकैकखण्डं वितरन् | ஒவ்வொரு துண்டையும் ஒவ்வொருவருக்கும் அளித்து |
| पुरा पाकशासनहुताश-<br>-नादीन् | கல்பகால ஆரம்பத்தில் இந்திரன், அக்னி முதலியவர்களை |

| | |
|---|---|
| दिशां ईश्वरान् चक्रे | திக்பாலகர்களாகச் செய்தாரோ |
| शिवा यद्भिक्षाशन--भागभाक् | பராசக்தியும் அவருடைய பிக்ஷான்னத்தில் ஒரு பாகத்தை உண்டு |
| त्रिजगतां अन्नप्रदात्री | மூன்று உலகங்களுக்கும் அன்னம் அளிக்கும் வள்ளலானாளோ |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

**விளக்க உரை:**

திக்குகளையே தனது ஆடையாக உடைய எம்பெருமான் அதைப் பத்து பாகங்களாகப் பகிர்ந்து இந்திரன், அக்னி முதலான பத்து தேவதைகளுக்கும் அளித்தார். அந்த ஆடையின் சிறு பாகத்தைப் பெற்றதாலேயே அவர்கள் திக்பதிகளாக விளங்கும் பெருமை அடைந்தார்கள். இந்தப் பத்து தேவதைகளும் சிவனுக்கு அதீனமான ஆவரண தேவதைகள் ஆனார்கள் என்பது போதாயனர் முதலான சூத்திரகாரர்களால் விளக்கப்பட்டிருக்கிறது.

அதேபோல் சித்ரூபிணியாகிய அம்பிகையும், அவருடைய பிக்ஷாடன அன்னத்தின் ஒரு பகுதியைப் பெற்று, மூவுலகங்களுக்கும் அன்னம் அளிக்கும் அன்னபூர்ணியாக விளங்குகிறாள்.

தாருகா வனத்தில் மோஹினி வேஷம் பூண்ட விஷ்ணுவுடன் கம்பு கேழ்வரகு முதலிய பலவகைப்பட்ட தானியங்களை யாசித்துவர அம்பிகை அவைகளைச் சமைத்து அளிக்க, அவ்வன்னத்தை மூன்று பாகங்களாகப் பகிர்ந்து மூவரும் உண்டனர். மூன்றில் ஒரு பாகத்தைப் பெற்றதனாலேயே உலகங்களைப் போஷிக்கும் அன்னபூரணியாகத் திகழ்கிறாள்.

இவ்வாறு பரமேச்வரனுடைய க்ருபாலேசம் பெற்றதாலேயே அதனைப் பெற்றவர்கள் பெரும் ஸௌபாக்யத்திற்கு அருகதை ஆகிறார்கள் என்பது இதனால் உள்ளங்கை நெல்லிக்கனி ஆகிறது.

என்னே! மஹேசனின் மஹிமை?

**(16)** அவதாரிகை:

"யதேச்சையாக உலாவும்போது எவருடைய கால் கட்டைவிரலினால் கீறப்பட்ட கோல (வட்டம்) வடிவில் அமைந்த உத்தம ஆயுதத்தைப் பெற்றதாலேயே மஹாவிஷ்ணு "தைத்யாரி" என்ற சிறப்பினைப் பெற்றாரோ, அத்தகைய மஹேசனே எனது ஸ்வாமி" என்று இப்பாடல் மூலம் விளக்குகிறார்.

स्वच्छन्दं चरतो हि यस्य चरणाङ्गुष्ठाग्रसंपादिता
रेखा काचन हेतिराजपदवीं प्राप्ता जगद्विश्रुताम्।
लब्धा दैत्यभिदा तपोभिरुपदीकृत्य स्वकं लोचनं
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| स्वच्छन्दं चरत: यस्य | யதேச்சையாக உலாவுகின்ற எவருடைய |
| चरणांगुष्ठाग्र संपादिता | கால் கட்டைவிரலால் கீறப்பட்ட |
| काचन रेखा जगद्विश्रुतां हेतिराजपदवीं प्राप्ता हि | ஒரு ரேகை, உலகெலாம் புகழ்ந்து கூறும் உத்தமமான ஆயுதமாகும் உயர்வை அடைந்ததல்லவா! |
| (सा पुन:) दैत्यभिदा | (மறுபடியும் அதுவே) அஸுரர்களுக்கு அஞ்சிய மஹாவிஷ்ணுவினால் |

तपोभि: स्वकं लोचनं उपदीकृत्य — ஆயிரம் தாமரைகள் கொண்டு அர்ச்சிப்பதாகிய நியமங்களால் (அந்நியமத்திற்கு பங்கம் ஏற்பட்ட காரணத்தால்) தமது கண்ணையே காணிக்கையாக அளித்து

लब्धा — அடையப்பட்டதோ

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

**விளக்க உரை:**

ஒரு சமயத்தில் இந்திரன் வெகுபடாடோபத்துடன் கைலாசம் சென்றான். அங்கு வாயிற்காப்போன் வேடந்தரித்து நின்ற சிவபெருமானிடம் பகவானைப் பார்ப்பதற்கு உரிய சமயம் பற்றி ஆணவத்துடன் வினவ, பணிவற்ற அவனது செயலும், சொல்லும் அவருக்கு சினத்தை ஊட்டிய காரணத்தால் இந்திரனைச் சினத்துடன் திக்காரம் செய்தார். அதனால் நடுங்கிய இந்திரன் கீழே விழுந்தான்.

அப்போது சிவபெருமானது கோபக்கனலிலிருந்து தோன்றிய 'ஜலந்தரன்' என்ற அஸுரன் சிவப்ரஸாதத் தினால், மிகுந்த இறுமாப்பு அடைந்தவனாகினான். அவனை அழிக்க வழியறியாத வானவர்கள் பரமேச்வரனைத் தஞ்சமடைந்தனர்.

கருணாமூர்த்தியாகிய அவர் ஒரு ஸித்தர் வேடம் தரித்துப் பூமியில் தம் கால் கட்டை விரலால் ஒரு சக்ராகாரமான ரேகையை வரைந்து, ஜலந்தரனிடம் அதைப் பெயர்த்து எடுத்துத் தன் பலத்தைக் காட்டும்படி சொல்ல - அவனும் அதனை எடுக்க முயன்றதும் அச்சக்கரத்தாலேயே அவன் அழிக்கப்பட்டான்.

அத்தகைய சக்கர ஆயுதத்தை, ஆயிரம் தாமரை மலர்கள் கொண்டு அர்ச்சிப்பதாகிய நியம ஆராதனை செய்ததன் மூலம் விஷ்ணு பரமேச்வரனது கருணைக்குப் பாத்திரராகி அடைந்தார். தக்ஷயக்ஞநாச சமயத்தில் அச்சக்கரத்தை வீரபத்ரரின் மாலையிலுள்ள கபாலம் விழுங்கி விட்டது.

அதனால் மறுபடியும் மஹாவிஷ்ணு அச்சக்கர ஆயுதத்தை அடைவதற்காக ஸஹஸ்ரகமல அர்ச்சனா நியமமாக மஹேசனை ஆராதிக்கும்போது ஒரு தாமரை குறைவதாகிய அர்ச்சனா நியமபங்கம் ஏற்பட்டபோது தாமரைக் கண்ணனாகிய மஹாவிஷ்ணு தனது கண்களில் ஒன்றை எடுத்து அர்ச்சனையைப் பூர்த்தி செய்ததின் மூலமாக ஈச்வர அனுகரஹத்தைப் பெற்று மீண்டு அந்த ஹேதிராஜ சக்கரப் படையைப் பெற்றார். (இவ்வரலாறு காஞ்சீ புராணத்திலும் சிவரஹஸ்யத்திலும் கூறப்படுகிறது.)

இவ்வளவு பெருமை எவருடைய கால் கட்டை விரலால் கீறிய ரேகைக்கு உள்ளதோ அவரே எனது ஸ்வாமி.

(17) அவதாரிகை:

எல்லா வேதங்களும் நேரடியாகவோ மறைமுகமாகவோ எந்த ஈசனைத் துதிக்கின்றனவோ அவனே முழுமுதற்கடவுள் 'என்று கொண்டாடுகிறது.

त्राणं काचन बाणकोणमितरा त्राणस्य मूलं परा
यन्तारं कतिचिद्रथाङ्गमितरा शिष्टाः पुनः स्वामिनम्।
इत्थं संस्तुवते चिरन्तनगिरः साक्षात्प्रणाल्यापि यं
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| काचन बाणं | ஒரு வேதம் பரமேச்வரனது பாணத்தையும் |
| इतरा बाणकोणं | மற்றொன்று பாணத்தின் முனையையும் |
| परा बाणस्य मूलं | வேறொன்று பாணத்தின் அடிப்பகுதியையும் |
| कतिचित् यन्तारं | இன்னொன்று தேரோட்டியையும் |
| इतरा रथाङ्गम् | மற்றொன்று தேர்ச்சக்கரத்தையும் |
| शिष्टा: पुन: स्वामिनं | எஞ்சியவை நேரடியாக ஸ்வாமியையும் |
| इत्थं चिरन्तनगिर: यं | இவ்வாறு வேதங்கள் அனைத்தும் எந்த மஹேசனை |
| साक्षात् प्रणाल्या अपि | நேரிடையாகவோ வேறு வகையினாலோ |
| संस्तुवते | புகழ்கின்றனவோ |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

***விளக்க உரை:***

வேதங்களில் விஷ்ணு, பிரம்மா, சூர்யன், சந்திரன், அக்னி மற்றுமுள்ள தேவதைகள் பலரும் ஆங்காங்கு புகழ்ந்து கூறப்பட்டுள்ளார்கள். ஸ்ரீருத்ரன் நேரிடையாக ப்ரதானமாகப் புகழ்ந்து கூறப்படுகிறார். இந்த விஷயங்களையும், பகவானின் த்ரிபுரஸம்ஹார லீலையையும் கருத்தில் கொண்டு இச்சுலோகம் ஆக்கப்பட்டுள்ளது. முன்னரே 12வது சுலோகத்தின் விளக்க உரையில் திரிபுர ஸம்ஹார விருத்தாந்தம்

கூறப்பட்டுள்ளது. சரப உபநிஷத்திலும், யஜுர் வேதத்திலும் இதே வரலாறு கூறப்பட்டுள்ளது.

தேவர்கள் முப்புர வடிவில் திரிகின்ற அஸுரர்களைப் போரில் வெற்றி கொள்வதற்காக அக்னி, சந்திரன் விஷ்ணு இம்மூவரின் ஸமஷ்டி ரூபமான ஓர் அம்பை நிர்மாணம் செய்து, அதைப் பயன்படுத்தித் திரிபுரத்தில் உள்ள ஸ்த்ரீபாலர்கள் உள்ளிட்ட அனைத்து அசுரர்களையும் அடியோடு அழிக்க நிச்சயித்தனர்.

ஆனால் அந்த பாணத்தைப் பிரயோகம் செய்யும் ஆற்றல் ஸ்ரீருத்ரனைத் தவிர்த்த வேறு எந்த தேவனிடத்திலும் இல்லை என்பதைத் தெரிந்து, ஸ்ரீருத்ரனிடம் அந்த பாணத்தை ஒப்படைத்தனர்.

ஆகவே விஷ்ணு, சந்திரன், அக்னி, பரமான ஸ்துதிகள் மஹேசனின் பாணத்தைத் துதித்ததாகவே அமையும்.

அதேபோல், ப்ரம்மா, சூரியன் முதலானவர்களைப் பற்றிய ஸ்துதிகளும் தேரோட்டி, சக்கரம் முதலானவற்றைப் புகழ்ந்ததாகவே ஆகும்.

नमस्ते रुद्र

என்பன போன்ற மந்திரங்கள் அவரை நேரடியாகவே துதிக்கின்றன. இவ்வாறு எல்லா வகையிலும் துதிக்கப்படுபவர் சிவபெருமானே ஆகிறார்.

**(18)** அவதாரிகை:

எவருடைய பாதங்களில் ஒடுங்கி ஓய்வு எடுத்திருந்த நாதப்ரம்மத்தின் ஒலியைக் கேட்டு பதஞ்சலி முனிவர் சப்த சாஸ்திரத்தை அருளினாரோ – அத்தகைய பரமேசனே எனது ஸ்வாமி என்று கூறுகிறார்.

यदीयस्तुतौ — எவருடைய ஸ்துதியினால்

प्राचीनेत्यधुनातनेति भुवने वाङ्नाम या यावती
तां सर्वां परितः परीत्य चरणे यस्यायती विश्रमम्।
श्रृण्वन्नङ्गदतां गतः फणिपतिः शब्दागमं व्याकरोत्
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| भुवने प्राचीना | உலகில் பழமையான |
| इति अधुनातना इति | என்றும், புதியது என்றும் |
| वाक् नाम | சப்தங்கள் பிரஸித்தி பெற்ற |
| यावती | எத்தனை பிரிவுகளைக் கொண்ட |
| या | எந்த நாதப்ரம்மமானது |
| यस्य चरणे विश्रमं आयती | எந்த மஹேசனது திருவடியில் ஒய்வு பெற்றுள்ளதோ |
| तां सर्वां | அந்த சப்தங்கள் அனைத்தையும் |
| यस्य चरणे अङ्गदतां गतः | எவருடைய பாதத்தில் தண்டையாக விளங்குகின்ற |
| फणिपतिः | ஸர்ப்பராஜனாகிய ஆதிசேஷன் |
| परितः श्रृण्वन् | நன்றாகக் கேட்டு |
| परीत्य | ஆராய்ந்து |
| शब्दागमं व्याकरोत् | சப்த சாஸ்திரம் எனும் வியாகரண சாஸ்திரத்தைச் செய்தாரோ |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

*விளக்க உரை:*

*உலகில் வேதங்கள் பழமையான சப்தங்கள் எனவும், இதிஹாஸ, புராண, காவியங்கள் புதுமையான சப்தங்கள் எனவும் கூறப்படுகின்றன. இத்தகைய சப்த ப்ரபஞ்சங்கள் அனைத்தும், ஆதியில் மஹேசனின் நிருத்ய சமயத்தில் உடுக்கையிலிருந்து வெளிப்பட்ட மஹேச்வர சூத்திரங்களை அடிப்படையாகக் கொண்டு விளங்குபவை. அவைகளிலிருந்து பாணினி தமது வியாகரண சூத்திரங்களை எழுதினார். இந்த சூத்திரங் களுக்குப் பதஞ்சலி மஹாபாஷ்யம் செய்தார்.*

*சப்தங்கள் அனைத்துமே மஹேசனிடம் ஒடுங்கி யிருப்பதால் அவருக்குப் பாதஸரமாக விளங்கும் ஆதிசேஷனின் அவதாரமாகிய பதஞ்ஜலி அவைகளை நன்கு ஆராய்ந்து தெரிந்து மஹாபாஷ்யத்தைச் செய்தார்.*

*பாஷ்யங்கள் என்று சொல்லப்படுபவை பலவாக இருந்தாலும் "மஹா பாஷ்யம்" என்று சிறப்பித்துச் சொல்லக்கூடிய பெருமையைப் பதஞ்சலி முனிவர் எழுதிய வியாகரண பாஷ்யம் ஒன்றே அடைந்துள்ளது. கம்பீரமான நடையில் அழகுற அமைக்கப்பட்ட நூல் மஹாபாஷ்யம். அதனாலேயே சான்றோர்கள்*

महाभाष्यं वा पठनीयं महाराज्यं वा शासनीयम्

*என்று பெருமிதத்துடன் கூறுவர். இத்தகைய பெருமையைத் தமது திருவடியைத் தஞ்சம் அடைந்த அடியார்களுக்கு எவர் அருளுகிறாரோ அவரே எனது ஸ்வாமி என்று கூறுகிறார்.*

**(19)** *அவதாரிகை:*

गन्धर्वागमदेशिकौ तनुभृतां यत्कर्णयो: कुण्डले
यत्पादाङ्गदनिर्मितं पदमहाभाष्यं भुवि स्त्यायति।

पुण्यं पापमिति व्यवस्थितिरियं यद्वाहहेषाकृता
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| यत्कर्णयोः कुण्डले | எந்த மஹேசனது கர்ண குண்டலங்களாக விளங்கும் கம்பலன், அச்வதரன் என்ற பெயருடைய இரு கந்தர்வர்கள் |
| तनुभृतां गन्धर्वागमदेशिकौ | ஜனங்களுக்கு ஸங்கீத சாஸ்த்ர ஆசார்யர்கள் ஆனார்களோ |
| यत्पादाङ्गदनिर्मितं | எந்த மஹேசனது பாதஸரமாக விளங்கிய ஆதிசேஷனின் அவதாரமாகிய பதஞ்சலி முனிவரால் இயற்றப்பட்ட |
| पदमहाभाष्यं | வியாகரண மஹாபாஷ்யம் |
| भुवि स्न्यायति | உலகில் பிரஸித்தி அடைந்துள்ளதோ |
| पुण्यं पापं इति | புண்ணியம், பாபம் என்கின்ற |
| इयं व्यवस्थिति: | இந்த நிர்ணயமானது |
| यद्वाहहेषाकृता | எவருடைய தேர்க் குதிரைகளின் கனைப்பினால் செய்யப்பட்டதோ (குதிரை களாக விளங்கும் வேதங் களால் விளக்கப்பட்டதோ ?) |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

***விளக்க உரை:***

*கம்பலன் அச்வதரன் என்ற கந்தர்வர்கள் இருவர் பரமசிவனின் குண்டலங்களாக விளங்குகின்றனர்.*

இவர்களே சங்கீத சாஸ்திர ப்ரவர்த்தகர்கள் என்று கூறப்படுகின்றனர்.

பதஞ்சலி மஹேசனின் காலில் தண்டையணியாக இலங்குகின்றார். இவரே

महाराज्यं वा शासनीयं महाभाष्यं वा पठनीयं

என்று அறிஞர்கள் கொண்டாடும் மஹாபாஷ்யத்தை அருளினார்.

வேதங்கள் நான்கும் திரிபுர ஸம்ஹார ஸமயத்தில் சிவபெருமானின் தேர்க்குதிரைகளாகித் தொண்டாற்றின. இவைகளின் கனைப்பு ஒலிகள் (வேத வாசகங்கள்) "புண்ணியம் எனப்படுவது அக்னி ஹோத்ரம், சிவாராதனம் முதலிய நல்வினைகள் ஆற்றுவதாம். பாபம் எனப்படுவது, பரபீடனம், ஸுராபானம் முதலியவற்றால் ஏற்படுவதாம்." என்ற நிர்ணயத்தைச் செய்கின்றன.

இவைகள் இத்தகைய சிறப்புகளை சிவசேவையினாலேயே அடைந்துள்ளன. எனவே அச்சிவ பெருமானே எனது ஸ்வாமி ஆவார்.

(20) அவதாரிகை

பிரம்மாதி தேவர்கள் பெருமுயற்சியுடன் ஸாதிக்கும் ஜகத்கார்யம் பரமேச்வரனுடைய அல்ப ஸங்கல்பத்தாலேயே முடிவடைகிறது என்பதை இப்பாடல் விளக்குகிறது.

ध्यात्वा वर्णगणान् बहून्विरचितं यत्नेन यद्ब्रधसा
यच्छौरिर्बिभरांबभूव बहुधा भूत्वा च मृत्वा स्वयम्।
तल्लोकत्रयमीषदुल्लसितयच्चक्षुःस्फुलिङ्गे हुतं
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

वेधसा — பிரம்ம தேவனால்

बहून वर्षगणान् ध्यात्वा — பல்லாயிரம் ஆண்டுகள் தியான யோகத்தில் அமர்ந்து

यत्नेन यत् विरचितं — பெருமுயற்சியால் எந்த ஜகத் படைக்கப்பட்டதோ

शौरिः — மஹா விஷ்ணு

स्वयं बहुधा भूत्वा मृत्वा च — தாமே பல தடவை பிறந்தும் இறந்தும்

यत् बिभरांबभूव — எந்த ஜகத்தை நிர்வஹித்தாரோ (ரக்ஷித்தாரோ)

तल्लोकत्रयं — அம்மூன்று உலகங்களும்

ईषदुल्लसितयच्चक्षुः — எவருடைய சற்றே திறக்கப்பட்ட கண்ணிலிருந்து

स्फुलिङ्ग — தெரித்த நெருப்புப் பொறியில்

हुतम् — எரிக்கப்பட்டதாக ஆனதோ

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

**விளக்க உரை:**

பல்லாண்டு காலம் தவம் இருந்து பிரம்ம தேவனால் படைக்கப்பட்டன இந்த ஜகத்துக்கள் அனைத்தும். இவற்றைக் காப்பதற்காகத் திருமால் பல பிறவிகள் எடுத்து மறைந்திருக்கிறார். அத்தகைய மூவுலகங் களையும் ஒரு நொடியில், தனது நெற்றிக் கண்ணை லேசாகத் திறந்து, அதிலிருந்து வெளிப்படும் சிறு நெருப்புப் பொறியால் பரமசிவன் அழித்து விடுகிறார்.

"இவ்வாறு கருணை சிறிதும் இன்றி ருத்ர மூர்த்தியாகிய சிவன் உலகங்களை அழிப்பதால் அவருக்கு என்ன பெருமை ஏற்படுகிறது? என்ற வினா எழுவது இயல்பே. அங்குதான் சற்று சிந்திக்க வேண்டும்.

கொடிய நோயால் வருந்துகின்ற நோயாளி ஒருவர்க்கு மருத்துவர் கடுமையான சிகித்ஸைகளை மேற்கொண்டால் அம்மருத்துவரை எவரேனும் 'கொடியவர்' எனக் கூறுவதுண்டா?

அதேபோல் ஸம்ஸாரம் எனும் கொடிய நோயால் வருந்துகின்ற ஜீவராசிகளுக்கு அனுக்ரஹம் செய்வதற்காகவே அவர் உலகங்களை அழிப்பதன் மூலம் லயமடையச் செய்கிறார். இவ்வாறு கருணா மூர்த்தியாகிய பரமேச்வரன் ஜீவராசிகளை வேறு வகையான முறையைக் கையாண்டு காப்பதாகிய இச்செயலைச் செய்யும் இவரது செயலைக் 'கொடிய செயல்' எனக் கூறுவது எவ்வாறு பொருந்தும்?

எனவே இத்தகைய கருணாமூர்த்தியே எனது ஸ்வாமி எனக் கூறுகிறார். மேற்கூறிய கருத்தை

संसार महाध्वचिरगतागतातिश्रान्तान् प्राणिनः कंचित्कालं महासुषुप्त्यापादनेन विश्रान्तिं प्रापयितुं सकलं जगद्जिहीर्षुः महादेवः तत्संहारोपकरणतया तमो गृह्णाति

என்ற ப்ரம்ம தர்க்க ஸதவம் 20ஆவது சுலோக உரை மூலமும் உணரலாம்.

(21) அவதாரிகை:

அர்த்தநாரீச்வர தத்துவத்தை இப்பாடல் மூலம் விளக்குகிறார்.

सौम्याग्नेयतया क्षराक्षरतया शब्दार्थभावेन वा

जीवब्रह्मतया जडाजडतया स्त्रीपुंसभावेन वा।

द्वेधा भिन्नमिदं हि यस्य वपुषी सव्यापसव्ये विदु:
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| सौम्याग्नेयतया | ஜலமயமாயும் அக்னிமயமாயும் |
| क्षराक्षरतया | சரீரமாயும் அந்தர்யாமியாயும் |
| शब्दार्थभावेन वा | சப்தமாயும் பொருளாயும் உள்ள தன்மையாலோ |
| जीवब्रह्मतया | ஜீவனாயும் பரமாத்மாவாயும் |
| जडाजडतया | ஜடமாயும் சேதனமாயும் |
| स्त्रीपुंसभावेन वा | பெண்ணாயும் ஆணாயும் உள்ள தன்மையாலோ |
| द्वेधा भिन्नमिदं | இவ்வாறு இரண்டிரண்டாகப் பிரிந்த அனைத்தையும் |
| यस्य सव्यापसव्ये | எந்த மஹேசனுடைய உடலின் |
| वपुषी विदु: | இடது வலது பாகமாக அறிகின்றனரோ |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| सोमस्य इदं सौम्यं अमृतं | ஜலமயம் |
| अग्ने: इदं आग्नेयं ज्वलनं | அக்னிமயம் |
| क्षर: | சரீரம் |
| अक्षर: | அந்தர்யாமியாக உள்ள கூடஸ்தன் |

क्षर: सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते
என்பது கீதாவாக்யம்

सव्यं वपुः शब्दमयं पुरारेः अर्थात्मकं दक्षिणमामनन्ति

*என்பது சிவலீலார்ணவம்*

(22) *அவதாரிகை:*

*"இவ்வாறு மஹேச்வரன் ஸர்வாத்ம ஸ்வரூபியாக உள்ள காரணத்தினாலேயே விஷ்ணு முதலான தேவர்களுக்கும் அமுதத்தை (அமிர்தத்தை) அடைவதற்குக் காரணமானார்" என்பதை இப்பாடல் விளக்குகிறது*

यल्लाभाय पुरा कियद्भिरमरैः सिन्धौ कियद्व्यापृतं
लेभे यत्परिवेषणेन कियतीं कीर्तिं रमावल्लभः।
यच्चूडाकुसुमक्षरन्मधुरसस्रोतः कणः सा सुधा
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| पुरा सिन्धौ यल्लाभाय | *முன்பு கடலிலிருந்து எதை அடையும் பொருட்டு* |
| कियद्भिः अमरैः | *எத்தனை தேவர்களால்* |
| कियत् व्यापृतं | *எவ்வளவு பிரயாசை அடையப்பட்டதோ* |
| रमावल्लभः | *லக்ஷ்மீ பதியான விஷ்ணு* |
| यत्परिवेषणेन | *எதைப் பகிரந்து அளித்ததின் மூலம்* |
| कियतीं कीर्तिं लेभे | *மிகுந்த கீர்த்தியை அடைந்தாரோ* |
| सा सुधा | *அந்த அமிர்தம்* |
| यच्चूडाकुसुमक्षरन्मधुरस— स्रोतः कणः | *எவருடைய முடியிலுள்ள மலரிலிருந்து கசிந்து வரும் மது ரஸத்தின் திவிலையோ* |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

விளக்க உரை:

அமிர்தத்தைப் பெறுவதற்காகத் தேவர்கள் அனைவராலும் மிகுந்த பிரயாசை எடுத்துக் கொள்ளப் பட்டது. அந்த அமிர்தத்தைப் பகிர்ந்து அளித்த காரணத்தாலேயே மஹா விஷ்ணுவும் மிகுந்த கீர்த்தியை அடைந்தார். அத்தகைய அமிர்தம் எந்த மஹேசனது சிரஸில் உள்ள மலரிலிருநத்து கசியும் மதுரஸத்தின் திவிலையாக உள்ளதோ, அவரே எனது ஸ்வாமி என்று கூறுகிறார்.

(23) அவதாரிகை:

எல்லையில்லாத தபசக்தியைப் பெற்றவர்கள் அகஸ்தியர் முதலான முனிவர்கள். அவர்களனைவரும் பரமேச்வரனின் அடிபணிந்து, அவர்பாத சேவையையே பெரும் பாக்யமாகக் கருதுகின்றனர் என்பதை இப்பாடல் மூலம் விளக்குகிறார்

य: स्रष्टा जगतां यतोऽयमभवत्तद्यस्य नाभेरभूत्
शेते यत्र स तं च यश्चुलुकयांचक्रे सहान्यै: क्षणात्।
तादृक्षा: शतश: पुराणमुनयो: यच्छिष्यवर्गे स्थिता:
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| जगतां य: स्रष्टा | மூன்று உலகங்களுக்கும் எவர் ஸ்ருஷ்டி கர்த்தாவோ |
| अय यत: अभवत् | அவர் எதிலிருந்து தோன்றினாரோ |
| तत् यस्य नाभे: अभूत् | அது (அந்தத் தாமரை) எவர் உந்தியிலிருந்து தோன்றியதோ |
| स: यत्र शेते | அவர் (விஷ்ணு) எங்கு உறங்குகின்றாரோ |

तं यः क्षणात् चुलुकयां — அந்தக் கடலை எவர் ஒரு நொடியில் தம் உள்ளங்கைக்குள்

चक्रे — அடக்கினாரோ

ताह्क्षाः शतशः — அத்தகைய அகஸ்தியர் போன்ற நூற்றுக்கணக்கான

पुराणमुनयः — பழமையான முனிவர்கள்

यच्छिष्यवर्गे स्थिताः — எவருடைய சீடர்களாக உள்ளனரோ

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

**விளக்க உரை:**

உலகங்கள் அனைத்தையும் படைத்தவர் பிரம்மா. அவர் ஒரு தாமரையிலிருந்து உண்டானார். அத்தாமரையோ மஹாவிஷ்ணுவின் உந்தியிலிருந்து தோன்றியது. அந்த மஹாவிஷ்ணுவோ பாற்கடலில் பள்ளி கொண்டுள்ளார். அப்பாற்கடல் முதலான ஏழு கடல்களையும் அகஸ்தியர் உள்ளங்கையில் அடக்கிப் பருகினார்.

இவ்வளவு மஹிமை பொருந்திய அகஸ்தியர் பரமசிவனின் பரமபக்தர். ஒரு சமயம் அகஸ்தியரிடம் தேவேந்திரன் சிவதத்வவிசாரம் செய்து கொண்டிருந்த வேளையில் அஸுரர்களின் யுத்த ஆரவாரம் கேட்டது. அதனைக் கேட்டு அஞ்சிய இந்திரனுக்கு அபயம் அளித்து – உடனடியாக கடற்கரையை அடைந்து மந்திரம் ஓதிய விபூதியை நெற்றியில் பூசிக் கொண்டு கையை விரித்துக் கடலை அழைக்க, கடல்நீர் முழுவதும் அவரது உள்ளங்கையில் நீர்த்திவிலைபோல் நின்றது. அதனை அவர் மஹாதேவனை தியானித்துப் பருகினார்

என்னும் இச்செய்தியை, ஸ்காந்தத்தில் உபதேச காண்டத்தில் காணலாம்.

இத்தகைய மஹிமை மிகுந்த நூற்றுக்கணக்கான முனிவர்கள் சிவபெருமானது ஸந்நிதியில் அவரது சீடர்களாகத் தொண்டு புரிந்து வருகின்றனர். அத்தகைய பெருமை உடைய சிவபெருமானே எனது ஸ்வாமியாவார்.

(24) அவதாரிகை:—

லௌகிக வழக்கிற்கு முற்றிலும் மாறுபட்ட முறையில் மஹேசனின் ஸாமர்த்தியம் உள்ளது" என்பதைக் கீழ்வரும் பாடல் மூலம் விளக்குகறார்:—

निर्व्यापारदशैव यस्य जगतीनिर्वाहधौरंधरी
मन्दस्मेरमुखाब्जतैव परमो यस्य द्विषां निग्रह:।
नित्यं यस्य च मौनमेव निखिलं छिन्ते सतां संशयं
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| यस्य निर्व्यापारदशैव | எவருடைய செயல்படாத நிலையே |
| जगतीनिर्वाहधौरंधरी | மூவுலகின் நிர்வாஹத்தையும் செய்யும் திறமையுடையதோ |
| यस्य मन्दस्मेरमुखाब्जतैव | எவருடைய புன்சிரிப்புடன் விளங்கும் முகத்தாமரையிலேயே |
| द्विषां परमो निग्रह: | பகைவர்களின் முழு அழிவும் உண்டாகிறதோ |
| यस्य च मौनमेव | எவருடைய மௌனமே |
| नित्यं सतां संशयं | எப்பொழுதும் மஹான்களின் ஸம்சயத்தை |

निखिलं छिन्ते — முழுமையாக அகற்றுகிறதோ

सः स्वामी मम दैवतं तदितरः नाम्ना अपि न आम्नायते॥

**விளக்க உரை:**

தான் செயல்படாத நிலையில் இருந்து கொண்டு, தனது சக்தி சமூகத்தின் மூலமாகவே மூவுலகங்களையும் நிர்வஹித்து வருபவர் மஹேச்வரன். அவருடைய போர்க் கருவிகளாகப் பலதேவதைகளும் பலவகைகளில் பணிபுரிந்தாலும் முப்புரங்களையும் தன் புன்சிரிப்பினாலேயே அவர் அழித்தார். ஸனகாதி முனிவர்களுக்கு ஏற்பட்ட ஆத்ம தத்துவம் பற்றிய சந்தேகத்தைத் தக்ஷிணாமூர்த்தி அவஸரத்தில் சின்முத்திரை மூலமாக மௌன விளக்கம் தந்து அகற்றினார்.

இவ்வாறு அனைத்தாலும் மாறுபட்ட தன்மையால் ஈசனது சாமர்த்தியம் விளங்குகிறது. அதனால் அவரே எனது ஸ்வாமி.

(25) *அவதாரிகை:—*

"போகம் மோக்ஷம் என்ற இருவகைப் பலன் களையும் அளிக்கும் வல்லமை பெற்றவர் பரமேச்வரன் ஒருவரே" என்பதை இப்பாடல் மூலம் விளக்குகிறார்:-

दत्ता श्रीरिषवे सिसाधयिषवे वासो गृहीतं सुरैः

सूताय व्ययिता गिरश्च किमितो दातास्म्यहं केवलः।

इत्यालोच्य दयानिधिर्दिशति यः कैवल्यमेवार्थिनां

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

सिसाधयिषवे इषवे श्रीः दत्ता — மூன்று உலகங்களையும் ரக்ஷிப்பதாகிய செயலைச் செவ்வனே செய்து முடிக்க விரும்பிய தமது பாணமாக

| | |
|---|---|
| | விளங்குகின்ற (வெகுகாலம் சிவஆராதனை செய்தவராகிய திருமாலுக்கு) எந்த மஹேச்வரனால் மஹாலக்ஷ்மி அளிக்கப்பட்டாளோ, |
| सूताय गिरश्च व्ययिता | தனது தேர்ப்பாகனாக விளங்கிய பிரம்ம தேவனுக்கு கல்ப ஆதியில் நான்கு வேதங்களும் எவரால் அளிக்கப்பட்டனவோ |
| सुरैः वासः गृहीतं | தனக்கு என இருந்த ஒரே ஒரு ஆடையையும் பகிர்ந்து கொடுத்த காரணத்தால், தேவர்களால் எவரது ஆடை எடுத்துக் கொள்ளப்பட்டதோ |
| केवलः अहं | எஞ்சியிருப்பவன் நான் ஒருவனே |
| इतः परं किं दातास्मि | இதற்குப் பிறகு எதனை கொடுப்பேன் |
| इति आलोच्य | என்று ஆலோசனை செய்து |
| यः दयानिधिः | எந்தக் கருணாநிதியானவர் |
| अर्थिनां | தன்னை ஆராதித்து வேண்டுகின்ற அன்பர்களுக்கு |
| कैवल्यमेव दिशति | கைவல்யத்தை அளிக்கின்றாரோ |

सः स्वामी मम दैवतं तदितरः नाम्ना अपि न आम्नायते।

*விளக்க உரை:*

*தம்மைப் பல்லாண்டு காலம் தவமிருந்து மகிழ்வித்ததனால் ஈசன் திருமாலுக்கு மஹாலக்ஷ்மியை அளித்தார். (இதனை முதற்பாட விளக்க உரையிலும் காணலாம்)*

*தனது ஒரே ஆடையை (திக்கை)ப் பத்து பாகங்களாக்கி அவற்றை இந்திரன் முதலான தேவதைகளுக்கு அளித்தார். (இக்கருத்தைப் பதினைந்தாவது பாடல் விளக்கத்தில் காணலாம்)*

*கல்ப ஆரம்பத்தில் பிரம்ம தேவனுக்கு வேதங்கள் அனைத்தையும் அளித்தார். இதனை,*

यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै

*என்ற சுவேதாச்வதர உபநிஷத் மந்த்ரத்தாலும்,*

यस्य निश्वसितं वेदा: यो वेदेभ्योऽखिलंजगत् निर्ममे तमहं वन्दे विद्यातीर्थ महेश्वरम्

*என்ற ஸாயண வேத பாஷ்ய மங்கள சுலோகத்தாலும் நன்கறியலாம்.*

*இவ்வாறு ஸர்வஸ்வத்தையும் மற்றவர்களுக்குக் கொடுத்த பிறகு, தியாகராஜராகிய சிவபெருமான் அடியார்களுக்குக் கொடுப்பதற்கெனத் தம்மைத்தவிர வேறெதுவும் இல்லாத நிலையை உணர்ந்து, தம் அடியார்களுக்கு கைவல்யத்தையே (அதாவது சிவஸாயுஜ்யத்தையே) அளிக்கின்றார். இதனை,*

''न सन्न चासच्छिव एव केवल:''

*என்னும் சுவேதாச்வதர உபநிஷத் விளக்கத்தில் காணலாம்.*

*"இவ்வாறு தன்னையே அளிக்கக் கூடியவராக விளங்குகின்ற பரமேச்வரனே எனது ஸ்வாமி" என்று கூறுகிறார்.*

(26) *அவதாரிகை:—*

*"புருஷன் முதலான அஷ்ட மூர்த்திகளாகப் பரிணமித்த ஜகத் எவருடைய சரீரமோ, அவரே இந்த ஜகத்திற்கும் மேற்பட்ட எனது ஸ்வாமி" என இப்பாடலால் விளக்குகிறார்:-*

शारीरः पृथिवी रवीन्दुदहना वायुर्वियत्तोयमि-
त्यष्टाभिश्चिदचिद्गणैः परिणतं विश्वं तनुस्त्वेति यः।
विश्वं विश्वविलक्षणः प्रभविता विश्वस्य विश्वाधिकः
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| शारीरः | *சிதாபாஸன் (புருஷன்)* |
| पृथिवी | *பூமி* |
| रवीन्दुदहना: | *சூர்யன், சந்திரன், அக்னி* |
| वायुः वियत् तोयं | *வாயு, ஆகாசம், ஜலம்* |
| इति अष्टाभिः चिदचिद्गणैः | *சேதன அசேதன வர்க்கங்களால்* |
| परिणतं विश्वं | *பரிணாமத்தை அடைந்த உலகம்* |
| स्वतनुः इति | *தனது சரீரம் என்றும்* |
| यः | *(மேலும்) எவர்* |
| विश्वं | *உலகமாகவும்,* |
| विश्वस्य प्रभविता | *உலகின் உத்பத்தி ஸ்தானமாகவும்* |
| विश्वविलक्षणः | *உலகத்தினின்றும் வேறுபட்டவராகவும்,* |

विश्वाधिक: — உலகத்தைக்காட்டிலும் மேம்பட்டவராகவும் உள்ளாரோ

स: स्वामी मम दैवतं तदितर: नाम्नापि नाम्नायते

***விளக்க உரை:***

*பகவான் உலகிற்கு உபாதான நிமித்தகாரணம் என்பதை* विश्वं विश्वस्य प्रभविता *என்று பதங்கள் காட்டும். ஆனாலும், அவர் பிரபஞ்சத்தைக் காட்டிலும் வேறு பட்டவர் என்பதை,* विश्वविलक्षण: *என்ற பதமும், ப்ரபஞ்சத்திற்கும் மேலானவர் என்பதை* विश्वाधिक: *என்ற பதமும் விளக்குகின்றன.*

**(27)** ***அவதாரிகை:—***

शब्दग्राममयी यदीयगृहिणी ख्याता यदीयं वपु:
त्रैलोक्यं जडचेतनाष्टकमयं यद्बाणगुप्तं जगत्।
सर्वासां दयितो गिरां सकललोकात्मा च सर्वेश्वर:
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

यदीयगृहिणी शब्दग्राममयी ख्याता — *எந்த மஹேசனுடைய இல்லாள் வேதம் மற்றும் எல்லா சாஸ்திரங்களும் அடங்கிய சப்த பிரபஞ்சமாக விளங்குகிறாளோ*

यदीयं वपु: जडचेतनाष्टकमयं — *எவருடைய சரீரம் ஜடசேதன மயமான அஷ்ட மூர்த்தமாகிய*

त्रैलोक्यं — *மூன்று உலகங்களாக விளங்குகிறதோ*

य: सर्वासां गिरां दयित: எவர் சப்தஸ்வரூபமாக உள்ள வேதங்களனைவற்றிற்கும் ப்ரியமானவரோ

य: सकललोकात्मा எவர் அகில உலகங்களுக்கும் அந்தர்யாமியாகவும்

सर्वेश्वर: च நியந்தாவாகவும் உள்ளாரோ

जगत् यद्बाणगुप्तं உலகமானது எவருடைய பாணமாகிய விஷ்ணுவினால் காக்கப்படுகிறதோ

स: स्वामी मम दैवतं तदितर: नाम्नापि नाम्नायते

"ஒரு நல்ல மனைவியானவள் எவ்வாறு தன் கணவனை அனுஸரித்து இருப்பாளோ அதுபோலவே, வேதங்களனைத்தும் சிவபெருமானையே அனுஸரித்து இருக்கின்றன" என்பதை விளக்கவே,

यदीयगृहिणी शब्दाग्रममयी ख्याता

என்று குறிப்பிடுகின்றார். இதனைச்சிறப்பாக வெளிப்படுத்தவே य: सर्वासां गिरां दयित: என்று குறிப்பிடுகிறார்.

(28) *அவதாரிகை:—*

"ஸ்ரீநீலகண்டர் ஒருவரே விஷராசியைத் தயக்கமின்றி ஏற்கின்றார். மற்றவர்கள் அதைக்கண்டு அஞ்சுகின்றனர்" என்பதை இப்பாடலில் விளக்குகிறார்:—

यज्जातीयकणाङ्कितानमहिं जीर्णं कमप्यावसन्

पार्श्वस्थापितपन्नगाशनपतिर्जागर्ति नित्यं हरि:।

यत्कण्ठाभरणायितस्त्रिजगतीभीम: स हालाहल:

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| यज्जातीयकणाङ्कित | எந்த ஹாலாஹல விஷத்தின் ஒரு திவிலைக்கு ஒப்பிடத்தக்க |
| आननं | முகத்துடன் கூடிய |
| जीर्ण कमपि अहिं आवसन् | தளர்ந்து போன ஒரு பாம்பின்மீது படுத்து |
| पार्श्वस्थापितपन्नगाशन— —पति: सन्नपि | அருகிலேயே நிறுத்தி வைக்கப்பட்ட பாம்பை உணவாக உட்கொள்ளும் பருந்துகளின் தலைவனாகிய கருடன் இருந்தும் |
| हरि: नित्यं जागर्ति | விஷ்ணு எப்பொழுதும் நல்லுறக்கம் கொள்ளாது விழித்துக்கொண்டே இருக்கிறாரோ |
| त्रिजगतीभीम: | மூவுலகங்களுக்கும் அச்சமளிக்கும் |
| स: हालाहल: | அந்த ஹாலாஹல விஷமானது |
| यत्कण्ठाभरणायित: | அவருடைய கழுத்திற்கு அணிகலமாக ஆயிற்றோ |

स: स्वामी मम दैवतं तदितर: नाम्नापि नाम्नायते

**விளக்க உரை:**

ஹாலாஹல விஷத்தின் ஒரு திவிலைக்கு நிகராக உள்ள பாம்பினைக் கண்டு அஞ்சியே பாம்புப் படுக்கையில் படுத்துக் கிடக்கும் திருமால், தன் அருகிலேயே பாம்புகளை உண்ணும் கருடன் அருகில் இருந்தும் உறங்காத நிலையில் காணப்படுகிறார்.

ஆனால், அந்த ஹாலாஹல விஷத்தையே தனது கண்டாபிரணமாக ஆக்கிக் கொண்டவர் எனது ஸ்வாமி என்று கூறுகிறார்.

பகவான் மஹாவிஷ்ணுவிற்கு அகில உலகங்களையும் ரக்ஷிப்பதாகிய அலுவலை அளித்தவர் பரமேச்வரன்.

எவ்வாறு எனில், பராசக்தியானவள் சிவனுடைய ஆணைப்படியே உலகியலை நடத்துவதற்குத் தனது இச்சா, ஞான, க்ரியா சக்திகளிடம் அந்த பாரத்தை ஒப்படைத்துத் தான் பரமசிவனுடன் ஸாமரஸ்ய பராயணையாக நிகழ்ற பரமானந்தத்தை அனுபவிக்கிறாள். அத்தகைய சக்திகளுள் ஒருவளாகத் திகழ்பவளே மஹாலக்ஷ்மி. அவளை அடைந்தபிறகே விஷ்ணு வைகுந்தபதியாகவும் திகழ்ந்தார்" என்பதை முதற்பாடல் விளக்கத்தாலும், முப்பத்தொன்பதாம் பாடல் விளக்கதாலும் உணரலாம்.

அவருடைய ஆணையைச் சரிவர நடத்துவதற்காகவே லோக ரஷண ஜாகரூகராக ஸர்வ ஜாக்ரதையாக விழிப்பு நிலையிலேயே இருக்கிறார். இதனை निद्रामुद्रां निखिलजगती रक्षणे जागरूकां என்பார் போஜராஜர்.

சிவ உத்க்ருஷ்டதயைப் பாடிவரும் கவி கிழப் பாம்பில் படுத்துள்ள விஷ்ணு - அருகில் கருடன் இருந்தும், ஸர்ப்ப விஷபயத்தால் எப்போதும் விழிப்புடன் இருக்கிறார் என்று விந்யாசமாக விளக்குகிறார்.

ஹாலாஹல விஷத்தின் பயங்கரமான தன்மையை,

तदुग्रवीर्य दिशिदिश्युपर्यधो विसर्पदुत्सर्पदसह्यवीर्यम्।
भीता: प्रजा: दुद्रुवुरङ्ग सेश्वरा अरक्ष्यमाणा: शरणं सदाशिवम्

என்று பாகவதம் அழகாக விளக்குகிறது.

காக்கும் கடவுளாகிய திருமாலும் காப்பாரற்ற இயலாத நிலையில் அஞ்சியிருக்கும்போது, தன்னைச் சரணடைந்த உயிர்களைக் காப்பதற்காகக் கருணா மூர்த்தியாகிய எந்த பரமேச்வரன் அந்த ஹாலாஹலத்தைப் பருகி மூவுலக உயிர்களையும் ரக்ஷித்தாரோ அவரே எனது ஸ்வாமி என்று கூறுகிறார்.

(29) *அவதாரிகை:–*

*"பரமேச்வரன் தன்னைப் போஷித்துக் கொள்வதில் ஆஸக்தி அற்றவராக இருந்தாலும் உலகங்களை போஷிப்பதில் ஜாகரூகராக இருக்கிறார்" என்பதை இப்பாடல் மூலம் விளக்குகிறார்:–*

अन्योन्यश्वसिताशनैः फणधरैराविश्य सत्त्वान् बहिः।
भुञ्जानैः परिचारकैस्तृणकणैरानन्दिना नन्दिना।
भिक्षान्नोपचितैश्च दारतनयैः पुष्णाति विश्वानि यः
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| अन्योन्यश्वसिताशनैः | *பரஸ்பரம் விடப்படும்* |
| फणधरैः | *மூச்சுக்காற்றை உண்டு வாழும் பாம்புகளோடும்,* |
| बहिः सत्त्वान् आविश्य | *வெளியில் ஸ்திரீ புருஷர்களைப் பிடித்து* |
| भुञ्जानैः परिचारकैः | *உண்ணும் வேலை ஆட்களுடனும்* |
| तृणकणैः | *புற்களை உண்டு களிக்கும்* |
| आनन्दिना नन्दिना | *நந்தியுடனும்* |
| भिक्षान्न उपचितैः | *பிக்ஷான்னத்தை உண்டு* |
| दारतनयैः | *வளரும் பெண்டு பிள்ளைகளோடு இருந்தும்* |

य: विश्वानि पुष्णाति — எவர் உலகங்களை போஷித்து வருகிறாரோ

स: स्वामी मम दैवतं तदितर: नाम्नापि नाम्नायते

**விளக்க உரை:**

பரமேச்வரனுக்கு அணிகலன்களாக விளங்கும் பாம்புகள் காற்றை உண்டு ஜீவிக்கின்றன. அவருடைய பணியாட்களாகிய பூதாதி கணங்களோ மக்களின் மீது ஆவேசமாய்ப் புகுந்து தங்களைப் போஷித்துக் கொள்கின்றன. அவருடைய வாகனமாகிய நந்தியோ வெறும் புல்லை உணவாக உட்கொண்டு களிப்படைகிறார். பகவான் பிக்ஷாடனம் செய்து கொணர்ந்த உணவினை உட்கொண்டு கௌரியும், மோஹினியும், கணபதியும் முருகனும் திருப்தியடைகின்றனர்.

இவ்வாறு தனக்கும் தன்னைச் சார்ந்தவர்களுக்கும் அல்ப ஆஹாரத்தையே அபேக்ஷிக்கின்ற எம்பெருமான், உலகில் உள்ள மற்ற ஜீவராசிகளுக்கு அவைகள் விரும்பும் போக போக்யங்களையெல்லாம் அளித்து அருளுகிறார். ஆகவே, இவரே எனது ஸ்வாமி என்று கூறுகிறார்.

(30) *அவதாரிகை:—*

பரமேச்வரரது நித்யத்வத்தையும், மற்றவர்களது அநித்யத்வத்தையும் இப்பாடல் விளக்குகிறது:-

केयूराङ्गदहारकुण्डलकटीसूत्रोपवीतीभव
-द्भोगीन्द्रोद्भटफूत्कृतिव्यतिकरोन्मृष्टाङ्गरागो मुहु:।

संवर्तोपचितैस्त्रिलोकभसितैर्भूयोऽपि यो लिप्यते

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| केयूर – अङ्गद–हार–कुण्डल–कटीसूत्र–उपवीती भवद्भोगीन्द्र–उद्भट फूत्कृति–व्यतिकर–उन्मृष्ट अङ्गराग: मुहु: | காப்பு, வளையல், மாலை, குண்டலம், அரைஞாண், பூணூல் ஆகியவைகளாகி பகவானுக்கு அணி செய்பவையான பாம்புகள் அடிக்கடி விடக்கூடிய பயங்கரமான பெருமூச்சுக் காற்றினால் வாரிச் செல்லப்பட்ட உடல்பூச்சான சாம்பலை |
| संवर्त-उपचितै: | ப்ராளயாக்னியால் பொசுக்கப்பட்ட |
| त्रिलोकभसितै: | மூன்று உலகங்களின் சாம்பலால் |
| य: भूयोऽपि लिप्यते | எவர் மீண்டும் மீண்டும் உடலில் பூசிக்கொள்கிறாரோ |

स: स्वामी मम दैवतं तदितर: नाम्नापि नाम्नायते॥

**விளக்க உரை:**

“உலகங்கள் அனைத்தும் மீண்டும் மீண்டும் தோன்றியும் அழிந்தும் காணப்படுகின்றன. ஆனால் மஹேச்வரன் ஒருவரே நிரந்தரமாக விளங்கிக் கொண்டிருக்கிறார் என்பதை நயம்பட விளக்கி, அத்தகை பரமேச்வரனே என் ஸ்வாமி என்று குறிப்பிடுகின்றார்.

(31) *அவதாரிகை:—*

*"உயிர்களின் பந்த மோக்ஷங்களுக்கு மூல காரணமாக விளங்குபவர் பசுபதியாகிய பரமேச்வரனே" என்பதை இப்பாடலால் விளக்குகிறார்:-*

सर्वश्चेतनवर्ग एष पशुतामस्यानुमेने स्वयं
तेषामेष पतिः प्रभुर्नियमने निर्मोचने च स्वतः।
इत्याम्नायगिरः स्तुवन्ति बहुशः शाखासु शाखासु यं
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| एषः सर्वः चेतनवर्गः | *உலகில் உள்ள எல்லா ஜீவராசிகளும்* |
| अस्य पशुतां | *இந்தப் பரமசிவனுடைய பசுக்களாக இருக்கும் தன்மையை* |
| स्वयं अनुमेने | *தாங்களாகவே அனுமதித்து ஏற்றுக் கொண்டன.* |
| तेषां नियमने निर्मोचने च | *அப்பசுக்களின் பந்தத்திலும் விடுதலையிலும்* |
| एषः पतिः | *அப்பதியே (சிவனே)* |
| स्वतः प्रभुः | *தானே பிரபுவாக விளங்குகிறார்* |
| इति यं आम्नायगिरः | *என்று எவரை வேதவாக்யங்கள்* |
| बहुशः शाखासु शाखासु | *ஒவ்வொரு சாகையிலும் பெருமளவில் பலவகையில்* |
| स्तुवन्ति | *புகழ்ந்து பாடுகிறனவோ* |

सः स्वामी मम दैवतं तदितरः नाम्नापि नाम्नायते।

**விளக்க உரை:**

ஜாபாலோபநிஷத்தில்,

कथं जीवा: सर्वे पशव:? स: कथं तत्पतिरिति तमुवाच।
यथातृणाशिन: विवेकहीना: परप्रेष्या: कृष्यादिकर्मसु
विनियुक्ता: पुरुदु:खभरा: स्वस्वामिबध्यमाना:
गवादय: तथेमे। सर्वज्ञ ईश्वर एतेषां पति: पशुपति: तदज्ञान
पाशेन बध्नाति तज्ज्ञानान्मोचयति।

என்று கூறப்படுகிறது. இதன் விளக்கம்:

"ஜீவன்களெல்லாம் எவ்வாறு பசுக்களாகின்றன? பரமசிவன் எவ்வாறு அவைகளுக்குப் பதியாகின்றார்? என வினவுபவரை நோக்கி முனிவர் கூறுகிறார். "பசுக்கள் முதலான விலங்குகள், புற்களை மேய்கின்றன; பகுத்தறிவு அற்றவராக உள்ளன; பிறரால் மேய்க்கப் படுகின்றன; உழவு போன்ற வேலைகளில் ஈடுபடுத்தப் படுகின்றன; சுதந்திரமாக இருக்க வழியின்றித் தத்தம் யஜமானர்களால் கட்டிப்போடப்பட்டு மிகுந்த துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கின்றன.

அதுபோலவே, இந்த ஜீவன்களாகிய பசுக்களுக்கு ஸர்வக்ஞனான ஸர்வேச்வரன் பதியாகின்றார். அறியாமை என்னும் கயிற்றால் கட்டி உலகில் உழல வைக்கிறார்; பின் ஞானமென்னும் உபாயத்தினால் (கத்தியினால்) கட்டை அவிழ்த்து விடுவிக்கிறார்' என்பதாம்.

येषामीशे पशुपति: पशूनां चतुष्पदां उतच द्विपदाम्।

என்று வேதம் கோஷிக்கிறது.

आत्मान: पशव: प्रोक्ता: सर्वे संसारवर्तिन:। तेषां पतित्वात्
देवेश: शिव: पशुपति: स्मृत:

என்று சிவபுராணம் விளக்குகிறது.

"ஆதலால் பசுபதியாக விளங்குகின்ற ஸர்வேச்வரனே எனது ஸ்வாமி" என்று கூறுகிறார்.

(32) *அவதாரிகை:—*

"எவ்வகையிலும் பலவானாக விளங்குபவர் ருத்ரதேவனே" என்பதை விளக்க வருகிறது இப்பாட

यच्छूलं गतसारमित्युपददे चक्रं जिघृक्षुर्हरिः

तत्खण्डो निहितस्तु येन दनुजे तेनापि दुर्निग्रहः

निर्जेतुं लवणं प्रतीक्ष्य विरहः शक्त्याभवत्सर्वधा

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| यच्छूलं गतसारमिति | எவருடைய சூலாயுதத்தை வலிமை குன்றியது எனக்கருதி |
| चक्रं जिघृक्षुः | சக்கர ஆயுதத்தைப் பெற விரும்பியவராய் |
| हरिः उपददे | மஹாவிஷ்ணு (தம் கண்ணையே) காணிக்கையாக அளித்தாரோ |
| तत्खण्डः | (அவ்விதம் மஹாவிஷ்ணுவினால் குறைவாக மதிப்பிடப்பட்ட) அச்சூலாயுதத்தின் ஒரு சிறுதுண்டு |
| येन (कारणेन) | எந்தக் காரணத்தால் |
| दनुजे निहितः | (லவண) அசுரனிடத்தில் அளிக்கப்பட்டதோ |

| | |
|---|---|
| तेनापि दुर्निग्रह: | அதனாலேயே அவன் பிறரால் வெல்ல முடியாதவன் ஆனானோ |
| लवणं | (அந்த) லவணாசுரனை |
| सर्वधा निर्जेतुं | எவ்வகையிலும் வெல்ல |
| शक्त्या प्रतीक्ष्य | முடியாத சக்தியுடன் கூடியவனாகக்கண்டு |
| विरुः अभवत् | ராமாவதார அவஸரத்தில் விஷ்ணு மனம் தளர்ந்தாரோ |

स: स्वामी मम दैवतं तदितर: नाम्नापि नाम्नायते

***விளக்க உரை:***

*ஸ்ரீமத் ராமாயணம் உத்தர காண்டத்தில் லவணாசுரவதம் (61–68 ஸர்க்கங்கள்) விஸ்தாரமாகக் கூறப்பட்டுள்ளது. அதில் சிவபெருமான் லவணா சுரனுக்குத் தமது சூலாயுதத்தை அளித்த வரலாறு காணப்படுகிறது அஃதாவது:–*

*லவணனின் தந்தை "மது" எனப்படும் அசுரன். அவன் சிவபெருமானைக் குறித்துக் கடும் தவமியற்றினான். அதன் பயனாய் அவருடைய சூலத்திலிருந்தே ஒரு பாகத்தை எடுத்து அமைக்கப்பட்ட ஒரு சூலத்தைப் பெற்றான்.*

*பகைவர்கள் மீது அதனை ஏவினால், அது அவர்கள் அனைவரையும் நொடியில் சாம்பலாக்கிவிட்டுப் பின் ஏவியவரிடமே திரும்ப வந்து சேர்ந்துவிடும்.*

*மதுவுக்குப்பின் அவன் மகன் லவணன் அச்சூலத்தைப் பெற்றான். மது வேண்டுகோளுக்கு இணங்க சிவபெருமான்,*

“உன் மகன் லவணனின் கையில் இச்சூலம் இருக்கும் வரையில் உன்மகனை எவராலும் எவ்வகையிலும் வெல்லமுடியாது” என்ற வரமளித்தார்.

அவ்வர பலத்தால் லவணன் சூலஹஸ்தனாக இருந்து கொண்டு உலகங்களனைத்தையும் துன்புறுத்தி வந்தான். அதனால் வருந்திய மஹரிஷிகள் இராமனைத் தஞ்சமடைய, அவர் லவணனை அழித்து வருமாறு சத்ருக்னனை அனுப்பி வைத்தார்.

அப்போது அவனிடத்தில்,

नायं मया शरः पूर्वं रावणस्य वधार्थिना।

मुक्तः शत्रुघ्न भूतानां महांस्त्रासो भवेदिति

“ராவணனைக் கொல்லக்கருதிய வேளையிலும் இந்த அஸ்த்ரத்தை பயன்படுத்தவில்லை. ஏன் தெரியுமா? இந்த திவ்ய அஸ்த்ரம் பஞ்சபூதங்களையும்கூட மிகுந்த அச்சத்திற்கு உள்ளாக்கி விடும். அத்தகைய சக்தி மிகுந்த அஸ்திரம் இது” என்று கூறி, விஷ்ணு தேஜோரூபமாக உள்ள அந்த திவ்ய அஸ்திரத்தை சத்ருக்னனிடம் கொடுத்தார்.

அத்தகைய அஸ்த்ரத்தை அளித்த பிறகும், “அந்த ஆற்றல் மிகுந்த லவணனை இந்த அஸ்த்ரம் ஒன்றால் மட்டுமே வெல்ல முடியும். இதனையும் நீ லவணன் கையில் சூலாயுதம் இல்லாத நேரமாகப் பார்த்து ப்ரயோகம் செய்தாலே அவனை அழிக்க முடியும். ஏனெனில் சிவன் அளித்த அச்சூலம் அவன் கையிலிருக்கும்போது எந்த சக்தியானாலும் அவனை

அழிக்க முடியாது. இதனை உணர்ந்து இந்த அஸ்த்ரத்தைப் பயன்படுத்தி அந்த லவணனை அழித்துவா" என்று அறிவுரை கூறி அனுப்பினார். சத்ருக்னனும் அவ்வாறே சூலாயுதம் லவணன் கையில் இல்லாத நேரம்பார்த்து வைஷ்ணவாஸ்த்ரப்ரயோகம் செய்து லவணனை அழித்தார். அத்தகைய சூலாயுதத்தை உடைய பரமேச்வரனே எனது தலைவர் என்று கூறுகிறார்.

(33) அவதாரிகை:—

"எந்த மஹேச்வரனது அங்கமாக விளங்குவனவற்றையும் கூட வேதமானது வணக்கம் செய்து போற்றுகிறதோ அவரே எனது ஸ்வாமி" என்று இப்பாடலால் விளக்குகிறார்:-

मन्नाम्ना श्रुतिरग्रहीदिति सुरा: ख्यातिं लभन्ते परां
मां वेदाहमिति श्रुति: कथयतीत्युत्सिच्यते माधव:।
ता यद्दोरिषुधन्वमन्युषु नमोवाकान्वहन्ते शतं
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| सुरा: | தேவர்கள் |
| मन्नाम्ना श्रुति: अग्रहीत् इति | என்னை பெயரால் வேதம் ஏற்றுக் கொண்டது என்று |
| परां ख्यातिं लभन्ते | பெரும் புகழை அடைகின்றனர் |
| मां अहं वेद इति | என்னை, 'நான் அறிவேன்' என்று |
| श्रुति: कथयति इति | வேதம் கூறுகிறது என்று |
| माधव: उत्सिच्यते | விஷ்ணுவும் பெருமைப்படுகிறார் |

ता: यद्दोरिषुधन्वमन्युषु — அந்த வேதங்கள் எவருடைய புஜம் அம்பு, வில், கோபம் முதலியவைகளிடத்தில்

शत नमोवाकान् वहन्ते — நூற்றுக்கணக்கான நமஸ்காரங்களைச் செய்கின்றனவோ

सः स्वामी मम दैवतं तदितरः नाम्नापि नाम्नायते

**விளக்க உரை:**

इन्द्रो वृत्रं हत्वा, अग्निरग्रो प्रथमो देवातानां என இவ்விதம் வேத மந்திரங்களில் இந்திரன், அக்னி முதலான தேவர்களின் பெயர்கள் கூறப்படுகின்றன.

वेदाहमेतं पुरुषं என்று புருஷ சூக்தம் கூறுவதால் மஹாவிஷ்ணுவும் பெருமைப்படுகிறார்.

ஆனால், ஸ்ரீ ருத்ர மந்த்ரங்கள்,

नमस्ते रुद्र मन्यव उतोत इषवे नमः।

नमस्ते अस्तु धन्वने बाहुभ्यामुत ते नमः॥

என்று நமஸ்காரபூர்வமாக ருத்ரனைமட்டுமின்றி, அவரது கோபம், அம்பு, வில், கைகள் ஆகியவற்றையும் கூட வணங்கித் துதிக்கின்றன.

ஆதலால், "இவரே எனது ஸ்வாமி" என்று கூறுகிறார்.

(34) **அவதாரிகை:—**

"உலகின் எல்லா வியவகாரங்களும் சிவாதீனமாகவே உள்ளன" என்பதை இப்பாடல் விளக்குகிறது:-

सर्गश्च प्रतिसंचरश्च जगतां यत्पक्ष्मणी संश्रितौ

शास्त्राणि श्रुतयोऽपि वा यदधरस्पन्दं प्रतीक्षयासते।

बन्धो मोक्ष इति द्वयं तनुभृतां यस्याक्षिकोणे स्थितं
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| जगतां सर्गश्च प्रतिसंचरश्च | உலகங்களின் உற்பத்தியும் அழிவும் |
| यत्पक्ष्मणी संश्रितौ | எவருடைய கண்ணிமைகளின் அசைவை அனுஸரித்து இயங்குகின்றனவோ |
| शास्त्राणि श्रुतयोऽपि वा | சாஸ்திரங்களோ வேதங்களோ |
| यदधरस्पन्दं प्रतीक्ष्य आसते | எவருடைய உதடுகளின் அசைவை நோக்கி இருக்கின்றனவோ |
| तनुभृतां | தேகம் படைத்தோர்க்கு |
| बन्धः मोक्षः इति द्वयं | பந்தம் மோக்ஷம் ஆகிய இரண்டும் |
| यस्य अक्षिकोणे स्थितं | எவருடைய கண்களின் ஓரத்தில் உள்ளனவோ |

सः स्वामी मम दैवतं तदितरः नाम्नापि नाम्नायते।

**விளக்க உரை:**

உலகங்களின் தோற்றமும் முடிவும் சிவபெருமானின் கண்கள் திறந்து மூடுவதாகிய செயலில் அமைகின்றன. இவ்வாறே வேதசாஸ்திரங்களும், உயிர்களின்பந்த மோக்ஷங்களும் இறைவனின் உறுப்புகளின் ஒருசிறு அசைவிலேயே அமைகின்றன. இவ்வாறு உலகநடப்புகள் அனைத்துமே சிவாதீனமாக உள்ளதால் அவரே எனது ஸ்வாமி என்று கூறுகிறார்.

(35) அவதாரிகை:—

"தேவர்கள் அனைவருமே ஈஸ்வர சக்திக்கு அதீனமானவர்கள். ஸர்வேசன் ஒருவரே ஸர்வ சக்திமானாகத் திகழ்கிறார்' என இப்பாடலால் விளக்குகிறார்:-

शक्त्यर्धं विनिवेशयामि परिगृह्णीतेत्युपच्छन्दिता:
संभूयापि वयं तदर्धवहने न स्म: समर्था इति।
जग्मु: प्रागमरा: शरादिविधया यस्य स्वयं शेषतां
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| शक्त्यर्धं विनिवेशयामि | எனது சக்தியில் பாதியை உங்களிடம் வைக்கிறேன் |
| परिगृह्णीत इति उपच्छन्दिता: | ஏற்றுக் கொள்ளுங்கள் என வற்புறுத்தப்பட்டவர்களாய் |
| वयं संभूय अपि | நாம் எல்லோரும் சேர்ந்தும்கூட |
| तदर्धवहनेन समर्था: न स्म: | அப்பாதி சக்தியைத் தாங்குவதில் வல்லவர்கள் இல்லை என்று |
| अमरा: शरादिविधया | தேவர்கள் அம்பு முதலான வகையில் |
| स्वयं यस्य शेषतां जग्मु: | தாமாகவே எவருடைய சேஷபாவத்தை அடைந்தார்களோ |

स: स्वामी मम दैवतं तदितर: नाम्नापि नाम्नायते

**விளக்க உரை:**

முன்னால் திரிபுர ஸம்ஹார காலத்தில் தேவர்கள் ஒன்றுகூடி எவ்விதத்தில் திரிபுரத்தை வெல்லலாம் என்று

ஆலோசித்து, 'அக்னி, ஸோமன், விஷ்ணு ஆகிய மூவரும் ஒன்று சேர்ந்து ஒரு பாணத்தை அமைத்து, (17ஆம் பாடல் விளக்கத்தில் இதனைக் காணலாம்) இந்த ஆற்றல் மிக்க ஆயுதத்தைப் பிரயோகிக்கும் ஆற்றல் தம்மிடம் இல்லை என்பதை உணர்ந்த தேவர்கள் பரமசிவனை அதனை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டினர். "உங்களிடம் ஆற்றல் இல்லையென வருந்த வேண்டாம். எனது சக்தியில் பாதியை உங்களுக்கு அளிக்கிறேன்" என்று கூற, "நாங்கள் அனைவரும் ஒன்று சேர்ந்தாலும் உங்களது பாதி சக்தியை தாங்கும் ஆற்றல் எங்களிடம் இல்லை. நாங்கள் அனைவரும் தங்களை வேண்டிக் கொள்ளுகிறோம். தாங்களே திரிபுர ஸம்ஹாரம் செய்ய வேண்டும். நாங்கள் ஒவ்வொருவரும் தங்களுக்கு யுத்த தளவாடங்களாகத் தொண்டு செய்கிறோம்" என்று கூறி, பகவானுக்கு வில்லாகவும் தேராகவும் மற்றுமுள்ள தளவாடங்களாகவும், ஆகி வானவர்கள் பகவானுக்கு உதவி புரிந்தனர். இதையே கவி, 'வானவர்கள் சிவனிடம் சேஷ பாவத்தை அடைந்தனர்' எனக் குறிப்பிடுகிறார்.

(36) அவதாரிகை:–

"வானவர் அனைவராலும் பூஜிக்கப்படும் பெருமை வாய்ந்த வேதம் சிவபெருமானுக்கு வாகனமாக அமைந்து அவர்க்குத் தொண்டுபுரிந்தது" என்று கூறி, சிவனுடைய உத்க்ருஷ்டதையை நயம்பட விளக்குகிறார் இப்பாடல் மூலம்:–

यानबधौ विनिमज्ज्य मीनवपुषा शौरिश्चिरायावहत्
यत्सन्धारणमेकमेव महतां माहात्म्यमुद्धुष्यते।
यानद्यापि विधिर्बिभर्ति वदनैस्ते यं वहन्त्यागमाः
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
| --- | --- |
| शौरिः मीनवपुषा | மஹாவிஷ்ணு மீன் வடிவத்துடன் |
| अब्धौ विनिमज्ज्य | கடலில் மூழ்கி |
| यान् चिराय अवहत् | எவைகளை வெகுகாலம் சுமந்தாரோ |
| यत्सन्धारणमेकमेव | எவைகளை அத்யயனம் செய்து பெற்ற கௌசலம் ஒன்றே |
| महतां माहात्म्यं उद्घुष्यते | பெரியவர்களிடம் பெருமையைப் பிரகடனம் செய்கின்றதோ |
| यान् अद्यापि | எவைகளை இன்றும்கூட |
| विधिः वदनैः बिभर्ति | பிரம்மதேவன் தம் முகங்களால் தாங்குகின்றாரோ |
| ते आगमाः | அந்த வேதங்கள் |
| यं वहन्ति | எவரைச் சுமக்கின்றனவோ |

सः स्वामी मम दैवतं तदितरः नाम्नापि नाम्नायते।

**விளக்க உரை:**

முன் ஒருகாலத்தில் 'ஸோமகன்' என்ற அசுரனால் வேதங்கள் கவரப்பட்டு கடலுக்குள் மறைத்து வைக்கப்பட்டன. அந்த வேதங்களை, மஹாவிஷ்ணு மத்ஸ்ய அவதாரம் எடுத்து கடலுக்குள் சென்று ஸோமகனை வென்று மீட்டுவந்தார்..

அத்தகைய பெருமைவாய்ந்த வேதங்களை அத்யயனம் செய்து பெற்ற கௌசலத்தாலேயே பெரியோர்களின் பெருமை விளங்குகிறது.

அத்தகைய ஃவதங்கள் ஸ்மிருதிகள்

नावेदविन्मनुते तं बृहन्तं। स एको ब्रह्मण आनन्दः।

श्रोत्रियस्य चाकामहतस्य। वेदो धर्ममूलं।

என இவ்விதம் வைதிக மாஹாத்மியத்தைப் பறைசாற்றுகின்றன.

இவ்வாறு தர்ம மூலமாக விளங்குகின்ற காரணத்தாலேயே நான்முகன் தமது நான்கு முகங்களாலும் நான்கு வேதங்களையும் இன்றும் ஓதிக் கொண்டே இருக்கிறார்.

இவ்வாறு பெருமை மிகுந்து விளங்குகின்ற வேதங்கள் வாஹனமாய் பரமேச்வரனைத் தாங்குகின்றன என்றால் பரமேச்வரனின் பெருமையை இவ்வளவு என வரையறுத்துக் கூறவும் இயலுமோ?

(37) அவதாரிகை:

"ஸ்ரீ மஹாதேவன் ஒருவரே 'ஸர்வதேவ பரிவ்ருடராக' விளங்குகின்றார்" என்பதை இப்பாடல் விளக்குகிறது.

जेतुं त्रीणि पुराणि येन सहसारुढे धरत्रीरथे

वेदाश्वेषु विभुग्नजानुषु वृषो भूत्वा प्रयस्यन्हरिः।

वोढुं तं न रथं शशाक विधृतं शेषात्मनापि स्वयं

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| त्रीणि पुराणि जेतुं | த்ரிபுரங்களை ஜயிக்க |
| येन सहसा धरित्रीरथे आरुढे | எவராலும் விரைந்து பூமியாகிய தேரில் ஏறும்போது |
| वेदाश्वेषु विभुग्नजानुषु | வேதங்களாகிய குதிரைகள் முட்டிகள் உடைந்து விழுந்த பொழுது |

| | |
|---|---|
| हरि: वृषो भूत्वा | மஹாவிஷ்ணு எருது ரூபம் எடுத்து |
| शेषात्मना विधृतं | முன்னரே ஆதிசேஷனால் தாங்கப்பட்டதாக இருந்தாலும் |
| स्वयं तं रथं वोढुं | தாமும் தேர்வடிவில் உள்ள பூமியைத் தாங்க |
| प्रयस्यन् अपि | பெருமுயற்சி செய்தும்கூட |
| न शशाक | ஆற்றல் அற்றவர் ஆனாரோ |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते।।

*விளக்க உரை:*

த்ரிபுர ஸம்ஹார ஸமயத்தில் பரமேச்வரனுக்கு பூமி தேராகவும், வேதங்கள் குதிரைகளாகவும் பணிபுரிந்தன. அத்தேரில் சிவன் விரைந்து ஏறும்போது அவருடைய பளுவைத் தாங்க முடியாமல் குதிரைகளின் முட்டிகள் சட சட சப்தத்துடன் தேர் விழும் நிலையில் இருப்பதை அறிந்த திருமால் அதனை எருது வடிவெடுத்துத் தாங்கப் பெருமுயற்சி எடுத்தார்.

முன்னரே ஆதிசேஷன் பூமியைத் தாங்கியிருந்தும், திருமால் எருது வடிவில் தாமும் தாங்க முயன்றும் முடியாமற் போயிற்று. இத்தகைய வலிமை மிக்கவர் எனது ஸ்வாமி என்று கூறுகிறார் கவி. महतो महीयान् என்று வேதமும் அவரது மஹத்வத்தைப் பறை சாற்றுகின்றது.

சங்கர ஸம்ஹிதையில், திருமால், எருது ஆகியும், அம்பாகியும் சிவபெருமானுக்குத் தொண்டு புரிந்ததற்கான காரணம் பற்றிய விளக்கத்தை நாம் அறியலாம்.

“முன்பு மேகவாஹன கல்பத்தில் தர்மமானது தான் சிவபெருமானுக்கு வாஹனமாக ஆகவேண்டும் என்ற

விருப்பத்துடன் தவம் புரிவதைக் கண்டு, சிவனின் பெருமையை உணர்ந்து, மஹாவிஷ்ணு தானும் அவருக்கு வாஹனமாக வேண்டும் எனக்கருதிச் சிவபெருமானை நோக்கிக் கந்தமாதனபர்வதத்தில் கடும் தவம் இயற்றினார். அதன் பயனாக சிவனை நேரில் - கண்டு, 'என்னைத் தாங்கள் வாஹனமாகவும் பாணமாகவும ஏற்றுக்கொள்ள வேண்டும்'' என்ற வரங்களை, मामङ्गीकुरु देवेश वाहनत्वशरत्वयोः என்று பிரார்த்தித்துப் பெற்றார்.

சிவபெருமானும் 'அவ்வாறே ஆகுக' என அருளினார். அவ்வாறு பெற்றவரத்தின் காரணமாகவே, திருமால் எருதாகவும் பாணமாகவும் ஆகி சிவத்தொண்டு புரிந்தார்' என்ற செய்தியை சங்கர ஸம்ஹிதை விளக்குகிறது.

**(38) அவதாரிகை:-**

பரிவாரங்களுடன் கூடிய பரமேச்வரனுக்கு உரிய சொற்களை அடைமொழியின்றிப் பயன்படுத்தினாலும் அவற்றைப் பாமரனும் புரிந்து கொள்வான். அத்தகைய ஜகத்பிரஸித்தராக விளங்குபவர் எனது ஸ்வாமி என்று இப்பாடல்மூலம் விளக்குகிறார் கவி:-

अम्बा यद्गृहमेधिनी त्रिजगतां शब्दान्तराण्यन्तरा
सन्त्यज्योपपदं वदन्ति च जना एकं यमेवेश्वरम्।
मुक्त्वा च प्रतियोगिनं वदति यत्सूनुं कुमारं श्रुतिः
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| यद्गृहमेधिनी | எவருடைய இல்லாள் |
| शब्दान्तराणि अन्तरा | அடைமொழி ஒன்றும் இல்லாமலேயே |

| | |
|---|---|
| त्रिजगतां अम्बा | மூவுலகங்களுக்கும் தாய் ஆகிறாளோ |
| जना: | ஜனங்கள் |
| यं एकमेव | எவர் ஒருவரையே |
| सन्त्यज्य उपपदं | அடைமொழியை நீக்கி |
| ईश्वरं वदन्ति | 'ஈச்வரன்' எனக் கூறுகின்றனரோ |
| श्रुति: यत्सूनुं | வேதமானது எவருடைய தனயனை |
| प्रतियोगिनं मुक्त्वा | அடைமொழியின்றி |
| कुमारं वदति | "குமாரன்" என்றே கூறுகிறதோ |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि न आम्नायते॥

**விளக்க உரை:**

'ஈச்வரன்' என்று சொன்னால் அது பரமேச்வரனைத் தான் குறிக்கும். 'நரேச்வரன்' 'ஜனேச்வரன்' என்பதுபோல் அவரைக் குறிக்க அடைமொழி தேவை யில்லை.

அதேபோல், 'அம்பா' என்ற சொல் உமா தேவியைத்தான் குறிக்குமேயல்லாது பிறரை ஒருபோதும் குறிக்காது.

அதேபோல் 'குமாரன்' என்ற சொல்லும் முருகன் ஒருவரையே குறிக்கும். இதனை உறுதிப்படுத்த வேதம், புராணம் ஆகியவற்றில் ஏராளமான ப்ரமாணங்கள் உள்ளன.

ईशावास्यमिदं सर्व। ईशान: सर्व विद्यानां ईश्वर: सर्व भूतानां।
यस्मिन् ईश्वर इत्यनन्यविषय: शब्दो यथार्थाक्षर:।

शब्दमीश्वरमित्युच्चैः सार्घ चन्द्रं बिभर्ति यः। ईश्वरः शर्व ईशानः इत्यमरः। श्रियं लक्ष्मीं औपलामम्बिकां गां। आरवुस्ते रुद्र पशुस्तं जुषस्व एष ते रुद्र भागः सह स्वस्रांबिकया। उमाकोमलहस्ताब्ज संभावितललाटिकं। हिरण्यकुण्डलं वन्दे कुमारं पुष्करस्रजम्॥

என்பன போன்று கணக்கற்ற பிரமாணங்கள் உள்ளன.

(39) அவதாரிகை:—

பரமேச்வரனின் சித்சக்திவாயிலாக ஜகத் தந்த்ரம் இலங்குகிறது. ஆனால் அவரோ செயலொன்றிலும் ஈடுபடாது பரமானந்த நிலையிலேயே எப்பொழுதும் விளங்குகிறார்" என்ற கருத்து இப்பாடலால் விளக்கப் படுகிறது:-

विश्वं मुञ्च बधान वेति हि परा शक्तिर्यदाज्ञापिता
ज्ञानेच्छाकृतिशक्तिषु स्वयमिमं विन्यस्य सर्व भरम्।
आस्तेऽनुत्तरसामरस्य परमानन्दानुसन्धायिनी
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| पराशक्तिः | பராசக்தியானவள் |
| विश्वं मुञ्च बधान | பிரபஞ்சத்தை உண்டுபண்ணு, அல்லது ஒடுக்கு என்று |
| शिवेन यदा आज्ञापिता | சிவனால் எப்பொழுது கட்டளை இடப்படுகிறாளோ |
| तदा स्वयं इमं सर्व भरं | அப்பொழுது (அப்பராசக்தி) தானும் இந்த முழுப் பொறுப்பையும் |

यदीयस्तुतौ — எவருடைய ஸ்துதியினால்

ज्ञानेच्छाकृतिशक्तिषु — ஞான - இச்சா - க்ரியா சக்திகளிடம்

विन्यस्य — அளித்துவிட்டு,

अनुत्तर सामरस्य — நிகரற்ற

परमानन्दानुसन्धायिनी — பரமானந்த சுகானுபவத்தைத் தானும் பெற்று

आस्ते — விளங்குகிறாளோ

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि न आम्नायते॥

விளக்க உரை:

பராசக்தி சிவனுடன் இணைபிரியாமல் இரண்டறக் கலந்து இருப்பவள். அப் பராசக்தி, ஸதாசிவனுடைய ஆக்ஞையை அனுஸரித்து, தனது ஞான - இச்சா, க்ரியா சக்திகளின் மூலம் இந்தப் பிரபஞ்சத்தை நடத்தி வருகிறாள். தான் தனித்துச்செய்ய வேண்டியது என எதுவுமில்லாததால், பரமேசனுடன் சேர்ந்து நிகரற்ற பரமானந்த சுகானுபவத்தைப் பெற்றிருக்கிறாள்.

(40) அவதாரிகை:—

"ஆகமங்கள் கூறும் இருநூற்றிருபத்தினான்கு (224) புவனங்களும் பரமேசனின் சக்திலேசமாகிய ஐந்து கலைகளில் வியாபிக்கப்பட்டுள்ளன" என்பதை இப்பாடலால் விளக்குகிறார்:-

उन्मीलच्चतुरग्रविंशतिशत द्वन्द्वात्मनां संख्यया
निर्भक्तैर्भुवनैः सनेतृभिरपि व्याप्तं कलापञ्चकम्।
यत्कोट्यंशपराख्यशक्तिकणिकालेशस्य लेशायते
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| उन्मीलच्चतुरग्रविंशतिशतन्द्वन्द्वात्मना संख्यया | இருநூற்று இருபத்துநான்கு எண்ணிக்கையால் |
| निर्भक्तैः भुवनैः | வகுக்கப்பட்ட |
| सनेतृभिः | உலகங்களுடனும் அந்தந்த உலகங்களின் அதிபதிகளுடனும் |
| व्याप्तं कलापञ्चकं | வியாபித்திருக்கும் ஐந்துவகைக் கலைகள் |
| यत्कोट्यंशपराख्यशक्ति-कणिकालेशस्य | எவருடைய பராசக்தியின் கோடி அம்சத்தின் ஒரு சிறு திவிலையினுடைய |
| लेशायते | லேசத்தில் அடங்குகின்றனவோ |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

**விளக்க உரை:**

நிவிருத்திகலா, பிரதிஷ்டாகலா, வித்யாகலா, சாந்திகலா, சாந்த்யாதீதகலா என்பன 'கலாபஞ்சகம்' எனப்படுபவையாம்.

இவைகள் முறையே 108, 56, 27, 18, 15 புவனங்களை வ்யாபித்து நிற்கின்றன. இக்கலைகள் அனைத்தும் பரமேசனின் பராசக்தியின் கோடி அம்சத்தின் ஒரு திவிலையில் அடங்குகின்றன. அத்தகைய பரமேசனே எனது ஸ்வாமி என்று கூறுகிறார்.

(41) அவதாரிகை:—

"பரிபூரண ஆனந்தத்தின் எல்லையாகத் திகழ்பவர் பரமசிவனே" என்பதை இப்பாடலால் விளக்குகிறார்:-

परमानन्दमहार्णवस्य कणिका या काप्यविद्यानिल

व्याधूता शतधा विभिद्य भुवनं व्याप्ता श्रुतीनां गणैः।

ब्रह्म त्वं तदसीति वादमुखरैरद्यापि चान्विष्यते।
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

यस्यानन्दमहार्णवस्य — எந்த பரப்ரம்மத்தின் ஆனந்தப் பெருங்கடலினுடைய

या कापि कणिका — ஏதோ ஒரு திவிலை

अविद्याअनिलव्याधूता — அவித்யை என்னும் காற்றினால் தாக்கப்பட்டு

शतधा विभिद्य — பல பாகங்களாகப் பிரிக்கப்பட்டு

भुवनं व्याप्ता — உலகத்தை வ்யாபித்து உள்ளதோ

श्रुतीनां गणै: — வேத சமூகங்களால்

वादमुखरै: — வாத வாக்கியங்களினால்

ब्रह्म तत्त्वं असि इति — அந்த ப்ரம்மம் நீயே என்று

अद्यापि च अन्विष्यते — இன்றும் தேடப்படுகின்றதோ

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि न आम्नायते॥

**விளக்க உரை :**

அகண்டாகாரமான பரப்ரம்மத்தினிடம் அவித்யையின் காரணமாகக் கற்பிக்கப்பட்ட உபாதிகளால் ஜீவன்கள் தங்கள் தங்கள் தனித்தன்மையை பாவித்து உழலும் போது, வேதங்கள், तत्त्वमसि, अहं ब्रह्मास्मि என்பன போன்ற வாக்கியங்களின் மூலம் ஜீவ-ப்ரம்ம அபேதத்தைப் போதிக்கின்றன.

தன்னிடம் தோன்றும் ஆனந்த அனுபவம், அந்த அகண்டாகார ப்ரம்மானந்தத்தின் ஒரு திவிலையே

என்றும், அஞ்ஞானத்தினால் ஏற்படுத்தப்பட்ட உபாதி, மெய்ஞ்ஞானத்தால் அழிந்ததும் ஜீவனாகிய திவிலை, பரமாத்மாவாகிய பரப்ரம்மத்தின் ப்ரம்மானந்தப் பெருங்கடலில் இரண்டறக் கலந்து பரப்ரம்மமாகவே ஆகிவிடுகிறது என்பதே வேதங்களின் பரம உபதேசமாக விளங்குகிறது.

(42) *அவதாரிகை:—*

श्रेय: संसरतां किमस्ति परमं नामापवर्गाच्च न:
तद्दानादधिको न कश्चन गुणोऽस्त्यस्मद्धियां गोचर:
तद्यद्दर्पणसंप्रसादसुलभं नालं यदीयस्तुतौ
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| संसरतां न: | ஸம்ஸாரஸாகரத்தில் உழலும் நமக்கு |
| अपवर्गाच्च | மோக்ஷத்தைக் காட்டிலும் |
| परमं श्रेय: | உயர்ந்த நலன் |
| किमस्ति नाम | வேறொன்று இருக்கிறதா என்ன? |
| तद्दानादधिक: | அந்த தானத்திலும் உயர்ந்த |
| कश्चन गुण: | மற்ற ஒரு குணம் |
| अस्मद्धियां गोचर: नास्ति | எமது அறிவுக்குப் புலப்படவில்லை |
| तत् | அந்த மோக்ஷம் |
| यद्दर्पणसंप्रसादसुलभं | எதனால் கண்ணாடியில் விளங்கும் பிரதி பிம்பம்போல் |
| सुलभं | எளிதோ |

यदीयस्तुतौ — எவருடைய ஸ்துதியினால்

न अलं — போதுமானதாக ஆகாதோ

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि न आम्नायते॥

**விளக்க உரை:**

பகவான் ஆசுதோஷன். அதனால் அவரைத் திருப்திப் படுத்துவது மிக எளிது. ஒரு பில்வதளத்தை பக்தியோடு போட்டு அர்ச்சிக்கும் அன்பர்க்கு அவர் மோக்ஷ ஸாம்ராஜ்யத்தையே அளித்து விடுகிறார். ஏனெனில், தம்மைத் துதிக்கும் அடியார்க்கு, அவருடைய பிறவித்துயரம் நீங்குவதற்கு மோக்ஷத்தை விட்டால் வேறொன்றும் சிறப்பு உடையதாக இல்லை. அளிப்பதற்குப் போதுமான தகுதி வாய்ந்ததாகவும் இல்லை எனக்கருதியே, தன்னைத் தொழும் அன்பர்க்கு வீடுபேற்றையே அளித்துவிடுகிறார்.

இவ்வாறு ஆசுதோஷராய் அடியார்க்கு மோக்ஷ ஸாம்ராஜ்யத்தையே அளிக்கக்கூடிய அச்சிவபெருமானே எனது ஸ்வாமி என்று குறிப்பிடுகிறார்.

**(43) அவதாரிகை:—**

"பிரபஞ்சங்கள் அனைத்துமேயழிந்தாலும், அழிவு இல்லாது விளங்குபவர் சிவபெருமான் ஒருவரே" என்பதை இப்பாடல் மூலம் விளக்குகிறார்.

प्लुष्टे स्थावरजङ्गमे शतधृतौ नष्टे जगत्स्रष्टरि
व्याप्ते दैत्यरिपौ हरेण विहरत्यस्मिन् महेशात्मना
अन्तर्भावयितुं स्वयं तमपि यस्येमे गणाः साक्षिणः
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

स्थावरजङ्गमे प्लुष्टे — சராசரங்கள் அனைத்தும் எரிக்கப்பட்டு

| | |
|---|---|
| जगत्स्त्रष्टरि शतधृतौ नष्टे | உலக ஸ்ருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மன் அழிந்து, |
| दैत्यरिपौ हरेण व्याप्ते | இந்திரனும் சிவனால் சம்ஹறிக்கப்பட்டு |
| अस्मिन् महेशात्मना | அந்த சமயத்தில் இப்பரமசிவன் ஒருவரே மஹேச ரூபத்துடன் |
| विहरति | லீலைகள் புரிகிறார் |
| तमपि | அப்படிப்பட்டவரையும் |
| स्वयं अन्तर्भावयितुं | தம்முள் அந்தப் பரமசிவரூபத்தில் பாவிக்க |
| यस्य इमे गणाः साक्षिणः | எவருடைய நந்திகேச்வராதி கணங்களாகிய இவர்கள் ஸாக்ஷிகளாக உள்ளனரோ |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

**விளக்க உரை:**

பிரளய காலத்தில் பகவானுடைய நெற்றிக் கண்ணிலிருந்து வெளிப்படும், நெருப்புப் பொறியினால் சராசரங்கள் அனைத்தும் அழிந்து போகின்றன. நான்முகனும் இந்திரனும் தமது ஆயுட்காலம் முடிந்து அழிகின்றனர். அத்தகைய நிலையில் பரமசிவன் ஒருவரே எஞ்சி நிற்கின்றார். இந்த நிலையை, நந்தி பிருங்கி, மஹாகாலன் முதலிய சிவகணங்கள் தம்முள் பாவிக்க வல்லவர்களாகின்றனர்.

**(44) அவதாரிகை:**

அழியாத நித்ய மங்களப் பொருளாக விளங்குவது திருநீறு ஒன்றே. எனவே, அதனை தரித்து ஜகன்மங்கள

காரகனாக விளங்கும் சிவபெருமான் அதிமங்கள விக்ரஹராக விளங்குகிறார்" என இப்பாடலால் விளக்குகிறார்.

नाशव्याप्यममङ्गलं तदितरं माङ्गल्यमेवं स्थिते
नश्यद्दैवतधारितैरलमलङ्कारैरभव्यैरिति।
नित्यैर्भस्मभिरेव भूषयति यः स्वाङ्गं जगन्मङ्गलं
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| नाशव्याप्यममङ्गलं | அழியும் தன்மை வாய்ந்த அனைத்தும் அமங்களம் எனப்படுவனவாம் |
| तदितरं मङ्गलम् | அழியாத் தன்மை வாய்ந்த மற்றது மங்களமாம் |
| एवं स्थिते | இவ்வாறு இருக்கும்போது |
| नश्यद्दैवतधारितैः | அழியும் தன்மை வாய்ந்த இதர தேவதைகளால் அணிந்து கொள்ளப்பட்ட |
| अभव्यैः अलङ्कारैः | அமங்களமான (அனித்தியமான) அலங்காரங்களால் |
| अलं इति | பயனில்லை என்று |
| नित्यैः भस्मभिरेव | அழியாத (மங்களப் பொருளான) திருநீற்றினாலேயே |
| यः जगन्मङ्गलं स्वाङ्गं | எந்த மஹேசன் ஜகன்மங்களமாக விளங்கும் தன்னுடலை |

भूषयति अணி செய்து கொள்கிறாரோ

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

***விளக்க உரை:***

सर्व हवा इदंभस्म

என்பது போன்ற வேதவசனங்களால் எல்லாப் பொருள்களுமே ப்ரளயத்தில் காலாக்னியால் பஸ்மமாகி விடுகின்றன. அழியும் தன்மை வாய்ந்த உலகங்கள் அனைத்திற்கும் அதிஷ்டானமாக விளங்குவது இந்த பஸ்மா ஒன்றே. இது அழியாத 'ஸத்'தாக உள்ளமையால் இது ஒன்றே நித்யமாகிறது. அழிவில்லாததால் இதுவே மங்களமாகிறது.

यश्शिवो नामरूपाभ्यां या देवी सर्वमङ्गला

तयो: संस्मरणात् पुंसां सर्वतो जयमङ्गलम्॥

என்றபடி எவருடைய பாதிபாகம் ஸர்வ மங்களத்தையும் வழங்கும் அம்பிகையோ, அவருடைய மங்களத்தைச் சொல்லவும் வேண்டுமோ!

भासनाद्भसितं प्रोक्तं भस्म कल्मषभक्षणात्

भूति: भूतिकरी पुंसां रक्षा रक्षाकरी सदा எனவும்:

विभूत्या भूतिमानासीत् वामदेवस्सदाशिव:

रक्षाबन्धस्तवया देवि रक्षा मां अनघे सदा॥

எனவும் விபூதியின் பெருமை பேசப்படுகிறது.

இவ்வளவு மங்களமாக விளங்கும் பஸ்மாவினால் தன்னை அணி செய்து கொள்ளும் ஈச்வரன் தனது உடலில், அறுவறுக்கத்தக்க அமங்களமான எலும்பு, உரோமம் முதலிய பொருள்களையும் அணிந்து கொள்வது எவ்வாறு பொருந்தும்? என்ற வினாவிற்கு ஸ்காந்தபுராணம் தக்ஷகாண்டம் அத்யாயம் 25ல்

காணப்படும் கீழ்வரும் விருத்தாந்தத்தின் மூலம் விடை பகர்கிறது.

முன்னால் மஹாப்ரளய காலத்தில் பிரும்மா, விஷ்ணு முதலிய தேவர்கள் ஒன்றுகூடிச் சிவ பெருமானிடம் பிரார்த்தித்தனர்.

"உங்கள் தலையால் தரிக்கப்பட்டுப் புனிதமான கங்கா நதியால் ஸகரபுத்ரர்கள் முக்தியடைந்தனர். அத்தகைய புனித நதியில் போடப்படும் அஸ்திக்கு உரியவர்கள் (இறந்தவர்கள்) முக்தியைப் பெறுகின்றனர். இத்தகைய பெருமையைக் கங்கை தங்களது சிகையில் ஸம்பந்தப்பட்டதாலேயே பெற்றிருக்கின்றது.

ஆதலால் நாங்களும் பிறப்பு இறப்பு எனும் பெருஞ்சுழலிலிருந்து விடுபட்டு முக்தியடைய எங்களுடைய எலும்பு முதலியவற்றைச் சமர்ப்பணம் செய்கின்றோம். ஏற்றருள வேண்டும்" என்று பணிவுடன் பிரார்த்திக்க, தேவதேவனும் அதனை ஏற்று அவர்களுடைய அஸ்தி முதலியவற்றையும் தரித்து அனுக்ரஹம் செய்தருளினார். இவ்வாறு அவர் செய்தது உலக நன்மைகளைக் கருதியே என்பது இதனால் தெளிவாகின்றதன்றோ!

இவ்வாறு எவர் ஜகத்ரக்ஷார்த்தம் அநுக்ரஹம் செய்கிறாரோ அவரே எனது ஸ்வாமி என்று கூறுகிறார்.

(45) அவதாரிகை:—

"பரமசிவன் உலகை நிக்ரஹம் செய்வதுபோல் தோன்றினாலும், உண்மையில் அனுக்ரஹமே செய்கிறார்" என்பதை இப்பாடல் விளக்குகிறது.

गङ्गाम्भः प्रोक्षणं स्मरमदोच्छेदो जगद्दाह इ—

त्याद्यं निग्रहवैशसं कलयते कण्ठाद्यपर्यन्त यः

अन्तः सन्ततमीहते तु शिवमाकीटं जगन्मात्रके

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| गङ्गाम्भः परिशोषणं | கங்காஜலத்தை ஜடையில் வற்றச் செய்ததும் |
| स्मरमदोच्छेद. | மன்மதனின் ஆணவத்தை ஒடுக்கியதும் |
| जगद्दाह इत्याद्यं | பிரளய காலத்தில் உலகை எரிப்பது முதலான |
| यं निग्रहवैशसं | எந்த சிக்ஷாரூபமான ஹிம்ஸையை |
| यः कण्ठादुपर्येव | எவர் கழுத்துக்கு |
| कलयते | மேலேயிருந்துதான் (மேலெழுந்த வாரியாக்த்தான்) செய்கிறாரோ |
| आकीटं जगन्मात्रके | புழு முதலிய ஸகல ஜீவராசிகளுக்கும் |
| अन्तः संततं शिवमीहते तु | உள்ளத்தில் அனைவரது நலனையே நினைத்து அருளுகிறாரோ |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

**விளக்கவுரை:**

'உலகையே அழிக்கிறேன்' என்று ஆணவத்துடன் வானுலகிலிருந்து பூமியை நோக்கி வந்த கங்கையின் கர்வத்தையும், "தவத்தில் இருக்கின்ற சிவனின் உள்ளத்தில் கலக்கத்தை உண்டு பண்ணுகிறேன்" என்று வீராப்புடன் செயல்பட்ட மன்மதனின் ஆணவத்தையும், பிறவிக்கடலில் உழன்று வருந்தும் உயிர்களுக்கு ஓய்வு அளிப்பதற்காக உலகலயத்தையும் செய்வது கழுத்துக்கு மேலுள்ள பாகங்களால் செய்த செயலேயாகும்.

உள்ளத்தில் சிறிதும் சினம் கொள்ளாது, குரு - சிஷ்யனைக் கண்டிப்பது போலவும், தந்தை - தனையனைக் கடிந்து கொள்வது போன்றும் செய்த செயலேயாகும்.

உண்மையில் உள்ளத்தால் ஸகல ஜீவராசிகளுக்கும் எப்பொழுதும் மங்களத்தையே அருளுகிறார்.

பரமேச்வரனின் செயல்கள் அனைத்தும் மேலெழுந்த வாரியாகப் பார்க்கும் போது கொடிய செயல்கள் போன்று தோன்றினிம், உள்ளத்தால் உலக நலன் கருதியே அவ்வாறு செய்கிறார் என்பதை

कण्ठादुपर्येव

என்ற சொற்றொடரைக் கொண்டு பாங்குற விளக்கியிருப்பது நயம் மிக்க விளக்கம் ஆகும்.

(46) அவதாரிகை:—

சிவனை அனைவரும் தியானிப்பது போலவே சிவனும் அனைவர்க்கும் நலனையே (மங்களத்தையே) ப்ரார்த்திக்கிறார்.

अभ्यर्चयन्ति यमामनन्ति यमनुध्यायन्ति यं संततं
गीर्वाणा: फणिनो नरा इति किमित्याश्चर्यमाचक्ष्महे।
यो देव: स्वयमप्यसौ शिवमनुध्यायन् शिवत्वं गत:
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| संततं | எப்பொழுதும் |
| गीर्वाणा: फणिन: नरा: | தேவர்கள், ஸர்ப்பங்கள், மனிதர்கள் முதலானவர்கள் |
| यं अभ्यर्चयन्ति | எவரை அர்ச்சனை செய்கின்றனரோ |
| आमनन्ति | துதிக்கின்றனரோ |

| | |
|---|---|
| अनुध्यायन्ति | தியானம் செய்கின்றனரோ |
| इति | என்ற (அவ்விஷயத்தில்) |
| किं आश्चर्य आचक्ष्महे | வியப்பைக் காண என்ன இருக்கிறது? |
| य: असौ देव: स्वयमपि | எந்த அந்த தேவன் தாமும் |
| शिवं अनुध्यायन् | எல்லா ஜீவராசிகளுக்கும் மங்களத்தையே நினைந்து |
| शिवत्वं गत: | சிவத்வத்தை அடைந்திருக்கிறாரோ |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

மகாபாரதத்தில்,

समा भवन्ति ते सर्वे दानवाश्चमराश्च ये
शिवोऽस्मि सर्वभूतानां शिवत्वं तेन मे स्मृतं॥

என்று கர்ண பர்வாவிலும்,

स मेधयति यन्नित्यं सर्वार्थानामुपक्रमम्।
शिवमिच्छन्मनुष्याणां तस्मादेष शिव: स्मृत:।

என்று ஆனுசாஸனிக பர்வாவிலும் கூறியுள்ளபடி எவர் ஜகத்துக்கெல்லாம் சிவத்தையே நினைந்து சிவத்வத்தை அடைந்தாரோ அவரே எனது ஸ்வாமி என்று கூறுகிறார்.

(47) அவதாரிகை:—

எவருடைய தேஜஸ்ஸைத் தாங்குவதற்கு பூதத்ரயத்தினாலும் முடியவில்லையோ அவரே எனது ஸ்வாமி எனக் கூறுகிறார்.

यास्वप्सु द्रुहिणोऽजनिष्ट धरणौ यत्रावतारो हरेः
लिल्ये यत्र हुताशने त्रिजगतां माता विदेहात्मजा।
तद्भूतत्रयमप्यभूदचतुरं यत्तेजसो धारणे
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| यासु अप्सु द्रुहिणः अजनिष्ट | எந்த நீரிலிருந்து பிரம்மா உண்டானாரோ |
| यत्र धरणौ हरेः अवतारः | எந்த பூமியல் மஹாவிஷ்ணுவின் அவதாரம் ஏற்பட்டதோ |
| यत्र हुताशने | எந்த நெருப்பில் |
| त्रिजगतां माता | மூவுலகிற்கும் அன்னையாகிய |
| विदेहात्मजा लिल्ये | ஸீதாதேவி புகுந்தாளோ |
| तद्भूतत्रयमपि | அந்த மூன்று பூதங்களும் |
| यत्तेजसः धारणे | எவருடைய வீர்யத்தைத் தாங்கும் விஷயத்தில் |
| अचतुरं अभूत् | ஆற்றல் அற்றவைகளாக ஆயினவோ |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

"ஸ்கந்தோத்பத்தி ஸமயத்தில் பகவானுடைய தேஜஸ்ஸை தரிப்பதற்கு – கங்கை – பூமி – அக்னி மூவரும் முடியாதவர்கள் ஆயினர்". என்னும்

விருத்தாந்தத்தை ராமாயணம் பாலகாண்டத்திலும், ஸ்காந்தத்தில் ஸம்பவ காண்டத்திலும் காணலாம்.

பிரம்மா விஷ்ணு ஸீதாதேவி ஆகியோரது முழுமையான சக்திகளையும் தாங்குவதற்குத் தகுதி பெற்றிருந்த இந்த மூன்று பூதங்களும் (பிருதிவி, அப்பு, தேஜஸ்) எந்த பரமேச்வரனது ஒருபகுதி தேஜஸ்ஸைக் கூடத் தாங்கும் ஆற்றல் அற்றவை ஆயினவோ, அத்தகைய ஆற்றல் (சக்தி) மிக்கவர் பரமேச்வரன். எனவே, அவரே எனது ஸ்வாமி என்கின்றார் கவி.

(48) அவதாரிகை:

यद्धर्मानुचिकीर्षया प्रववृते भिक्षाश्रमोऽनुत्तमो:
यदास्यव्रतलाञ्छनं परमिति ख्याता विभूति: श्रुतौ।
यत्सूक्तिश्रवणेच्छया सुकृतिनो मुञ्चन्ति काश्यामसून्
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| यद्धर्मानुचिकीर्षया | எந்த ஈச்வரனுடைய தர்மத்தில் உள்ள ஆவலினால் |
| अनुत्तमो भिक्षाश्रम: | நிகரற்ற பிக்ஷாச்ரமம் ஏற்பட்டதோ |
| प्रववृते यदास्य व्रतलाञ्छनं विभूति: | எவருடைய அடியார்களின் வ்ரத சின்னமாகிய விபூதியானது |
| परमिति श्रुतौ ख्याता | மிக மேலானது என்று வேதங்களில் புகழ்ந்து பேசப்படுகிறதோ |
| यत्सूक्तिश्रवणेच्छया | எவருடைய உபதேச வாக்கியத்தைக் கேட்க விரும்பி |

सुकृतिन: புண்ணியம் செய்தவர்கள்

काश्यां असून् मुञ्चन्ति காசியில் உயிரை விடுகின்றனரோ

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि न आम्नायते॥

**விளக்க உரை:**

பாசுபத விரதத்தின் சிறப்பும் உயர்வும் இங்கு கூறப்படுகின்றன. 'பிக்ஷாச்ரமம்' என்பது சிகையை முண்டனம் செய்து - கௌபீனமொன்றே அணிந்து - விபூதி தரித்து - பிக்ஷை எடுப்பதைக் குறிக்கும்.

अनुत्तम: என்ற அடைமொழி அதிவர்ணாச்ரம நிலையைக் குறிக்கும். விபூதி தாரணத்தின் உயர்வு, 'காலாக்னிருத்ர - ஜாபால - கைவல்ய - அதர்வ சிரஸ்' முதலிய உபநிஷத்துக்களிலும், மற்றும் ஸ்ம்ருதி - இதிஹாஸ - புராணங்களிலும் விசேஷமாகக் கொண்டாடப்படுகிறது.

अतस्सर्वं परित्यज्य त्रिपुण्ड्रं भस्म कुण्ठनम्।

नित्यं प्रयत्नत: कुर्वन् मुमुक्षु: मुच्यतेऽचिरात्॥

என்ற பிரமாணத்தின்படி ஸர்வ ஸங்க பரித்யாகம் செய்த ஸன்யாஸிகளும் - அதிவர்ணாச்ரமிகளும் கூட விபூதி தாரணத்தை விடலாகாது.

காசியில் பிராண வியோகம் ஆகின்ற உயிர்களுக்கு விச்வேச்வரர், 'ஓம் நமச்சிவாய' (ओं नम: शिवाय) என்னும் ஷடக்ஷர தாரக மஹாமந்த்ரோபதேசம் செய்து கரையேற்றுகிறார்.. இந்தத் தாரக மந்த்ரோபதேசம் பெற்று உய்யவேண்டும் என்று விரும்புகின்ற புண்ணிய சாலிகள் புத்திபூர்வமாகவே தங்களது பிராணனை அங்கு வியோகம் செய்கின்றனர்.

(49) *அவதாரிகை:—*

*நான்முகன் திருமால் முதலான பலரும் சிவனை ஆச்ரயித்த காரணத்தாலேயே மிகுந்த புகழை அடைந்துள்ளனர்" என்பதைக் கீழ்வரும் பாடலால் விளக்குகிறார்:-*

यत्सारथ्यपदस्थिते: शतधृतेरायु: परार्धाधिकं
शौरेर्य प्रति मार्गणत्वमयतो जागर्ति लक्ष्मी: स्थिरा।
यत्पादाश्रयिण: फणाधरपतेर्वाच: प्रथन्तेतरां
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| यत्सारथ्यपदस्थिते: | *எந்த பரமேச்வரனுக்குத் தேரோட்டியாக அமர்ந்த காரணத்தினாலேயே* |
| शतधृते: आयु: परा परार्धाधिकं | *பிரம்ம தேவனுக்கு பரார்த்தத்திற்கும் அதிகமான ஆயுள்பாவம் கிட்டியதோ* |
| यं प्रति मार्गणत्वं अयत: शौरे: | *எந்த பரமேச்வரனுக்கு பாணமாக இருக்கும் தன்மையை அடைந்த திருமாலினது* |
| लक्ष्मी: स्थिरा जागर्ति | *செல்வியாக திருமகளும் என்றும் நீங்காதவளாக; விளங்கிறாளோ* |
| यत्पादाश्रयिण: फणाधरपते: | *எந்த பரமேச்வரனது திருவடிகளை ஆச்ரயிக்கின்ற அரவரசனாகிய ஆதிசேஷனுடைய* |

| | |
|---|---|
| वाचः प्रथन्तेतराम् | உரைகள் மிக்க புகழுடையனவாக விளங்குகின்றனவோ |
| सः स्वामी | அத்தகைய பரமேச்வரனே அண்டபிண்ட சராசரங்கள் அனைவற்றிற்கும் முழுமுதற் கடவுளாக விளங்கும் தலைவர் ஆவார். |
| मम दैवतम् | எனது தெய்வமும் அவரே. |
| तदितरः नाम्ना अपि न आम्नायते | அப்பரமேச்வரனைத் தவிர்த்த பசுக்களாக உள்ள வேறு எந்த தேவனையோ மனிதனையோ வேதங்களோ, பிரதானமாக ஓரிடத்திலும் ஒருமுறைகூடப் பெயரளவில்கூட கூறப்படுகிற தில்லை. அப்பரமேச்வரன் ஒருவரையே வேதங்கள் பிரதானமாகப் புகழ்ந்து உத்கோஷிக்கின்றன. |

**விளக்க உரை:**

த்ரிபுர ஸம்ஹாரம் செய்யப் புறப்பட்ட பரமேச்வரனுக்குத் தேரோட்டியாகத் தொண்டு புரிந்த காரணத்தாலேயே பிரம்ம தேவனுக்கு பரார்த்தத்திற்கும் அதிகமான காலம் வாழும் வாழ்வு கிட்டியது.

திரிபுர ஸம்ஹார வேளையில் திருமால் அம்பாகித் தொண்டு புரிந்த காரணத்தாலேயே, ஓரிடத்திலும் நிலையாகக் தங்கியிராத திருமகள் திருமாலின் திருமார்பில் நீங்காது உறைந்து சிறந்து விளங்குகின்றாள்.

ஆடல் அரசராக விளங்கும் பரமசிவனின் திருவடிகளுக்குப் பாதஸரமாக விளங்குபவர் ஆதிசேஷன் என்ற அரவரசன். அவரே பதஞ்சலி முனிவராகித் தோன்றியவர். இவர் பாணினியின் வ்யாகரணம் எனப்படும் ஸம்ஸ்க்ருத மொழியின் இலக்கணங்களை வகுத்துக் கூறும் சூத்ரங்களுக்கு விரிவுரை (பாஷ்யம்) எழுதினார். அந்த பாஷ்யம் ஒன்றே 'மஹாபாஷ்யம்' என்று சிறப்பித்துக் கூறப்படுகின்ற பெருமையை அடைந்துள்ளது. இத்தகைய சிறப்பும் சிவத் தொண்டினால் அமைந்ததேயாகும்.

(50) *அவதாரிகை:—*

*"சிவனைப் 'பரமேச்வரன்' என்று கூறுவதற்குக் காரணமான பரம உத்கர்ஷ பாவனைக்கு ஸாக்ஷிகள் உள்ளனவா?" என்ற வினாவிற்கு இப்பாடல் விளக்கம் தருகிறது:-*

पारम्ये निगमागमा: परमसौलभ्ये पिशाचादयो:
वाञ्छातीतपदार्पणे स भगवान् वैयाघ्रपादो मुनि:।
सर्वाग:सहनेऽन्धकश्च दनुजो यस्य स्थिता: साक्षिण:
स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| यस्य पारम्ये | *எவருடைய பரம உத்கர்ஷ பாவனா விஷயத்தில்* |
| निगमागमा: | *வேத சாஸ்திரங்கள்* |
| साक्षिण: स्थिता: | *ஸாக்ஷிகளாக உள்ளனவோ* |
| परम सौलभ्ये | *பரம ஸௌலப்ய குண விசேஷத்தில்* |
| पिशाचादय: | *பூத பிசாசாதிகள்* |
| साक्षिण: स्थिता: | *ஸாக்ஷிகளாக உள்ளனவோ* |

| | |
|---|---|
| वाञ्छातीतपदार्पणे | வேண்டுவார் வேண்டுவனவற்றிற்கு அதிகமாகவே அளிக்கும் செயலில் |
| सः भगवान् वैयाघ्रपादो मुनिः | வையாக்ரபாத முனி என அழைக்கப்படும் உபமன்யு மகரிஷியே |
| साक्षी भवति | ஸாக்ஷியாக விளங்குகிறாரோ |
| सर्वागः सहने | எல்லாக் குற்றங்களையும் மன்னித்து அருளும் செயலில் |
| दनुजः अन्धकश्च | அசுரனான அந்தகனும் ஸாக்ஷியாக விளங்குகிறானோ |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि न आम्नायते॥

**விளக்க உரை:**

சிவபெருமானை 'ஸர்வேச்வரன்' என்று ஸர்வ உத்க்ருஷ்டராகக் கூறுவதற்குக் காரணங்களாக விளங்குபவை, வேதங்கள் "பரம ஸெளலப்யம், விரும்பியதற்கும் அதிகமாகவே கொடுக்கின்ற தன்மை, எத்தகைய குற்றங்களையும் மன்னித்து ஆட்கொள்ளுகின்ற தன்மை, எத்தகைய குற்றங்களையும் மன்னித்து ஆட்கொள்ளுகின்ற சிறப்பு" ஆகிய இத்தகைய சிறந்த குணங்கள் சிவபெருமானிடம் உள்ளதாலேயே வேதங்கள், आते पितर्मरुतां सुम्नं எனவும், न वा ओजीयो, भीषास्माद्वातः எனவும் உத்கோஷிக்கின்றன.

பக்தர்களின் விருப்பத்திற்கும் அதிகமாகவே கொடுக்கின்ற சிறப்பினை, 'வையாக்ர பாதர்' என அழைக்கப்படும் உபமன்யு மகரிஷியின் வரலாறு

(10ஆவது சுலோக விளக்கத்தில் காண்க) நமக்கு விளக்குகின்றது.

அன்பர்களின் குற்றங்களைப் பொறுத்து மன்னித்து உயர்பதவி அளிக்கும் தன்மையைச் 'சங்கரஸம்ஹிதை' என்ற நூல் விளக்கக்கூடிய அந்தகாசுரனது வரலாறு நமக்கு உணர்த்துகிறது.

அந்தகாசுரனது வரலாற்றுச் சுருக்கமாவது:—

அந்தகன் என்ற பெயருடைய ஓர் அசுரன் சிறந்த சிவபக்தன். மற்றவரது தேஜஸ் வலிமை முதலியவற்றை, அவர்கள் அறியாத வண்ணம் அபஹரித்துக் கொள்ளும் ஆற்றலைத் தவம்செய்து சிவனிடமிருந்து வரமாகப் பெற்றான்.

அவ்வர பலத்தால் தேவர்களின் ஆற்றல்களை யெல்லாம் அபஹரித்துக் கொண்டு வலிமை மிக்கவனாகி, பிரம்மாதி தேவர்களையெல்லாம் துன்புறுத்தத் தொடங்கினான். அதனால் அஞ்சிய வானவர்கள் பெண்வேடம் பூண்டு வெகுகாலம் மறைந்து வாழ்ந்து, பின் சிவனருளால் அவனை அழித்தனர்.

ஆனாலும் தனது பக்தனான அந்த அந்தகனை, அவனது குற்றங்களையெல்லாம் மன்னித்து, அவனுக்குப் பிரமத கணங்களின் தலைமைப் பதவியை அளித்து அருளினார்' என்று 'சங்கர ஸம்ஹிதை' எனும் நூல் விளக்குகிறது.

இவ்வாறு சிறந்த குணங்கள் அனைத்தும் பெற்றவராகத் திகழ்பவர் சிவபெருமான் ஒருவரே. அதனாலேயே அவர், "பரமேச்வரன்" என்று சிறப்பித்துக் கூறப்படுகிறார். அதனாலேயே பரம உத்க்ருஷ்டராகவும் விளங்குகிறார்.

(51) அவதாரிகை:—

ஸ்ரீ பரமேச்வரன் ஒருவரே ஸர்வ ஸாரக்ராஹி என்பதை இப்பாடல்மூலம் விளக்குகின்றார்:-

सारा: शब्दकुलस्य येन निगमा:वाहा इति स्वीकृता:

सारावद्रिषु कार्मुकं गृहमिति द्वौ हेमरुप्यौ हृतौ

सारा वारिषु जाह्नवी च विधृता भक्तानुकम्पाच्छलात्

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि नाम्नायते॥

| | |
|---|---|
| येन शब्दकुलस्य | எவரால் ஒலிகளின் |
| सारा: निगमा: वाहा: | ஸாரங்களாக விளங்கும் வேதங்கள் குதிரைகளாக |
| इति स्वीकृता: | ஸ்வீகரித்துக் கொள்ளப் பட்டனவோ |
| अद्रिषु सारौ हेमुरुप्यौ द्वौ | மலைகளில் சிறந்த தங்கமலையாகிய மேரு மலையும், வெள்ளிமலை எனப்படும் கைலாய மலையும் ஆகிய இருமலைகளும் |
| कार्मुकं गृहमिति हृतौ | முறையே வில்லாகவும் வீடாகவும் ஏற்றுக் கொள்ளப்பட்டனவோ |
| वारिषु सारा जाह्नवी च | ஆறுகளில் சிறந்த கங்காநதியும் |
| भक्तानुकंपात् छलात् | பக்தனாகிய பகீரதன் மீது கொண்ட அன்பு எனும் வ்யாஜகமாக |
| विधृता | (சிரஸில்) தாங்கிக் கொள்ளப்பட்டதோ |

स स्वामी मम दैवतं तदितरो नाम्नापि न आम्नायते।।

**விளக்க உரை:**

சப்தப்ரம்மமாக விளங்குகின்ற வேதங்களைக் காட்டிலும் சிறந்த ஒலிகளால் அமைந்த நூல்கள் என்பன உலகில் இல்லை. எனவே, எந்நாளும் அழியாத சிறப்புடன் விளங்குகின்ற அத்தகைய வேதங்களையே தமது தேரை இழுத்துச்செல்லும் குதிரைகளாக ஏற்றுக் கொண்டார் பரமசிவன்.

தங்க மலையாகிய மேருவும், வெள்ளிமலையாகிய கைலாயமும் மலைகளில் சிறந்தவை. ஆகவே, அவற்றுள் மேருவைத் தமது வில்லாகவும், கைலையைத் தமது இருப்பிடமாகவும் அமைத்துக் கொண்டார்.

புனிதத் தன்மையாலும், மருத்துவத்தன்மையாலும் சிறந்து விளங்குவது கங்கையாறு. எனவே, அதனை, பகீரதன் வேண்டிக் கொண்டான் என்பதை ஒரு காரணமாக வைத்துத் தலையில் தாங்கிக் கொள்வார் போல் எந்நாளுமே அதனைத் தமது சிரஸில் தாங்கிக் கங்காதரனாக விளங்குகிறார்.

இவ்வாறு உலகில் உள்ள ஸாரமான பொருள்கள் அனைத்தையுமே ஸ்வீகரித்துக் கொண்டவர் என் ஸ்வாமி என்று விளக்குகிறார் கவி.

(52) அவதாரிகை :

அகணித குணசீலனாய், குணங்கள் அனைத்திற்கும் பிறப்பிடமாகவும் இருப்பிடமாகவும் விளங்குகின்ற பரமேச்வரனுடைய பெருமைகளை 51 சுலோகங்களில் முழுமையாகக் கூறிவிட முடியுமா? ஆகவே, ஈசனது பெருமைகளில் சிலவற்றைக் கூறி விளக்கிய ஸ்ரீநீலகண்ட தீக்ஷிதர் அவர்கள்,

பரமேச்வர அனுக்ரஹத்தால் இவ்வுலகில் அவதரித்த ஸ்ரீகண்டவித்யேசரும், தனக்கு ஸர்வதந்த்ர உபதேஷ்டாவாகவும் விளங்கிய ஸ்ரீமதப்பய்ய தீக்ஷிதரை இந்த 52வது சுலோகத்தில் துதிக்கின்றார்.

भूमिर्भ्राम्यति बद्ध एव मरुति प्रत्यग्भ्रमोऽत्यद्भुतो
भ्राम्यन्त्येव सहाश्रयेण च दिवि ज्योतींषि सर्वाण्यपि।
आवर्तोऽयमपां भ्रमः परिणतो मूर्तिर्हरस्याष्टमी
यासावप्पयदीक्षितो जयति सा त्वेका निरस्तभ्रमा॥

| | |
|---|---|
| भूमिः | ஈச்வரனின் எட்டு வடிவங்களில் ஒன்றாகிய பூமியும், |
| भ्राम्यति | சுழன்று கொண்டே இருக்கிறது. |
| मरुति | காற்றிலும் கூட |
| अत्यद्भुतः प्रत्यग्भ्रमः | மிகவும் வியக்கத்தக்க சுழற்சியானது |
| बद्ध एव | பொருந்தியதாகவே உள்ளது |
| ज्योतींषि सर्वाणि अपि | சூர்யன், சந்திரன், அக்னி முதலான ஒளிப் பொருள்களனைத்துமே |
| दिवि आश्रयेण सह | தமது சுழற்சிக்கு ஆதாரமாக உள்ள ஆகாயத்துடன் கூடவே |
| भ्राम्यन्त्येव | சுற்றிக் கொண்டே இருக்கின்றன. |
| अपां परिणतः अयं आवर्तः भ्रमः | நீரில் தோன்றுகின்ற சுழல் வடிவான சுழற்சியானது |

| | |
|---|---|
| | (அனைவரும் காணக்கூடிய ஒன்றே) |
| या हरस्य अष्टमी मूर्ति: | எது எட்டாவது வடிவமாகக் கூறப்படுகிறதோ |
| अप्पय दीक्षित: सा अस्ति | அத்தகைய புமான் வடிவமாக அப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் விளங்குகிறார்கள். |
| सा तु एका | அத்தகைய அப்பய்ய தீக்ஷிதர் வடிவமாகிய புமான் வடிவம் ஒன்று மட்டுமே. |
| निरस्तभ्रमा जयति | சலனமற்றதாக நிலையானதாக ஸர்வோத்க்ருஷ்டமாக விளங்குகிறது. |

***விளக்க உரை:—***

நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் எனும் ஐந்து பூதங்களும் சூர்யன், சந்திரன் ஆகிய இரு ஒளித் தேவதைகளாகவும், 'தீக்ஷிதன்' என்று சொல்லப்படும் வேள்வி செய்கின்ற (செய்த) யஜமானனாகிய புமானும் ஆகிய எட்டு வடிவங்களும் சிவபெருமானுடைய வடிவங்களாம். இதனை

भूरंभांस्यनलोऽनिलोंबरं अहर्नाथो हिमांशु: पुमान्, इत्याभाति चराचरात्मकमिदं यस्यैव मूर्त्यष्टकम्

என்று ஆதிசங்கரர் தமது தக்ஷிணாமூர்த்தி அஷ்டகத்தில் குறித்திருப்பதைக் காணலாம். அதனாலேயே சிவபெருமான், 'அஷ்டமூர்த்தி' என வழங்கப்படுகிறார்.

அஷ்ட மூர்த்தியாக விளங்கும் சிவபெருமானுடைய எட்டு வடிவங்களில் புமான் வடிவம் ஒன்றைத் தவிர,

ஏனைய ஏழுவடிவங்களும் நிலையாக இல்லாமல் சுழன்று கொண்டே இருக்கக்கூடிய ப்ரமணை ஸ்வபாவம் உள்ளனவாகவே காணப்படுகின்றன.

ஆனால், எட்டாவது வடிவமாகிய புமான் வடிவமோ ஸ்திரமானது; சலனம் சிறிதும் (ப்ரமம், ப்ரமணம்) இல்லாதது. அத்தகைய எட்டாவது வடிவமாக விளங்குபவர் ஸ்ரீமதப்பய்ய தீக்ஷிதர் அவர்கள்.

அவர் ஈச்வர அனுக்ரஹத்தால் மண்ணுலகில் தோன்றியவர். அவருக்கு எவ்வகையாலும் 'ப்ரமம்' என்பது கிடையாது. எனவே அவரிடம் 'ப்ரமணமும்' கிடையாது.

அவர் ஸ்திர சித்தர். எனவே, சிவபெருமானுடைய ஏனைய ஏழுவடிவங்களினும் மாறுபட்ட எட்டாவது வடிவமாகிய புமான் வடிவில் விளங்குகின்ற ஸ்ரீமதப்பய்ய தீக்ஷிதர் அவர்கள் 'நிரஸ்த ப்ரமராகச்' சிறந்து விளங்குகிறார்.

சிவமஸ்து

ஓம் தத் ஸத்

